4 பக்கங்கள் 15 காசுகள்

# தீக்கதிர்

இந்திய கம்யூனிஸ்ட் கட்சி (மார்க்சிஸ்ட்) நாளிதழ்

பதிவு எண்: எம். 8798.

கதிர் 10] மதுரை 1-10-72 ஞாயிறு [மலர் 231

## சிறையிலிருந்து இளைஞர்கள் தப்பினர்

கொழும்பு, செப். 29—

அனுராதபுரத்திலுள்ள சிறையிலிருந்து 35 கைதிகள் தப்பினர்.

இவர்கள் இளைஞர் எழுச்சியின் போது கைது செய்யப்பட்டவர்கள்.

ஆயுதம் தறித்த இளைஞர் கோஷ்டி யொன்று சிறை காவலாளிகளைத் தாக்கி கைதிகளை விடுவித்தனர்.

## 'சர்வதேசக் கண்காணிப்பு தலைமையகம் ஹனோய்க்கு மாற்றம்

சைகோன், செப். 29—

இந்தோ-சீனு பற்றிய சர்வதேச கண்காணிப்புக் கமிசனின் தலைமையகத்தை சைகோனிலிருந்து வட வியட்நாம் தலைநகரான ஹனோய்க்கு இந்தியா மாற்றிவிட்டது. சைகோனிலிருக்கும் கமிசன் பிரதிநிதிகளை தென்வியட்நாம்அரசு வெளியேற்றியதைதொடர்ந்தே, இந்தியா தலைமையகத்தை ஹனோய்க்கு மாற்றிக் கொண்டது.

இத்தகவலை இன்று இங்குள்ள "இந்திய அதிகாரி ஒருவர் தெரிவித்தார்.

# புள்ளி விவரங்களில் மத்திய அரசு குல்மால்

[நமது சிறப்புச் செய்தியாளர்]

புதுடில்லி, செப். 28—

இவ்வாண்டு நாடெங்கிலும் பருவமழை தவறியதனுல் ஏற்பட்டுள்ள வறட்சி நிலையைக் குறித்து நாடாளுமன்றத்தில் சென்ற ஜூலை, ஆகஸ்டு மாதங்களில் விவாதங்கள் பல தடவை நடந்தன. இறுதியாக செப்டம்பர் 3-ம் தேதியன்று இந்தியா உணவு கார்ப்பொரேஷன் என்ற நிறுவனத்தின் தலைவர் மீது லஞ்ச ஊழல் குற்றச்சாட்டுகள் பற்றிய விவாதம் நடந்தது.

அரசின் கைவசம் 95 லட்சம் டன் உணவு தானியங்கள் கையிருப்பு இருக்கிறது எனவே நிலைமையைச் சமாளிப்பதில் கஷ்டமே இல்லை. ஏராளமாக மலிவு தானிய கடைகளை திறந்துவிட முடியும் என்று விவசாய உணவு மந்திரிகள் பக்ருதீன் அலி அகமதும், அண்ணுசாகேப் ஷிண்டேயும் உறுதியாகக் கூறினர்கள். ஆனால் நாடாளுமன்ற உறுப்பினர்கள் இந்தப் புள்ளி விவரத்தில் நம்பிக்கை இல்லை என்று கூறினர்கள். ஆளும் கட்சி உறுப்பினர்களும் சந்தேகத்தைத் தெரிவித்தனர். ஆயினும் அமைச்சர்கள் அவர்கள் கொடுத்தயே கணக்குகளை சாதித்தனர்.

### எவ்வளவுதான் கையிருப்பு?

இவ்வளவு கையிருப்பு இருக்குமானல் நியாய விலைக் கடைகளை ஏராளமாக அரசு திறந்து வினியோகம் செய்திருக்க முடியுமல்லவா? அதை ஏன் செய்யவில்லை? இந்த சந்தேகம் ஊர்ஜிதமாவதற்கு உத்தியோக பூர்வமாக பல சான்றுகள் கிடைத்திருக்கின்றன.

நாடாளுமன்றத்தில் அமைச்சர்கள் 95 லட்சம் டன் கையிருப்பு இருக்கிறது என்று கூறிய அதேசமயத்தில், நாடாளுமன்ற பொதுத் துறை நிறுவனங்கள் கமிட்டியின் முன்பு அதே அமைச்சகத்தின் செயலாளர் 85 லட்சம் டன் தான் கையிருப்பு இருப்பதாகக்கூறினர்.

ஆயினும்', அந்தக்கமிட்டியின்விசாரணைக்கு பிறகு 65 லட்சம் டன் தான் கையிருப்பு இருப்பதாக ஏற்றுக்கொண்டது. இதில் 25 லட்சம் டன் 'பைப் லைனில்' இருந்ததாம். அதாவது ஏற்கனவே வினியோகத்திற்கு அனுப்பப்பட்டு, ரயில் வாகனங்களில் போய்க்கொண்டிருந்ததாம். மேலும் பங்களா தேசுக்கு அனுப்பப்பட்ட 8 லட்சம் டன்களை கணக்கிலெடுத்து கொள்ளாமல் கொடுக்கப்பட்ட கணக்கு இது. அப்படியானல், உண்மையான கையிருப்பு 32 லட்சம் டன் என்ருகும்.

### ஒரே மர்மம்

சென்ற ஆண்டு கொள்முதல் செய்ததில் பஞ்சாபில் வாங்கிய கோதுமை மூட்டைகள் ரயில்வே ஸ்டேஷன்களில் கூட்ஸ் யார்டுகளில் திறந்த வெளியில் வைக்கப்பட்டிருந்தன. திடீரென்று பெய்த மழையில் அந்த கோதுமை ஸ்டாக் உண்பதற்கு லாயக்கற்றதாகி விட்டது. இதன் அளவு 10 லட்சம் டன்.

எனவே உண்பதற்கு லாயக்கான உணவு தானியக் கையிருப்பு 22 லட்சம் டன்களே இருக்கும் என்ருகிறது.

இது இவ்வாறிருக்க இம் மாதம் 26ந் தேதியன்று "விவசாயப் பொருள்களின் விலைக் கமிஷனின்" இவ்வாண்டறிக்கை சமர்பிக்கபட்டுள்ளது. அதுசெப்டம்பர் 30-ல் கூடும் முதலமைச்சர்கள் கூட்டத்தில் விவாதிப்பதற்கு சமர்ப்பிக்கப்பட்டிருக்கிறது.

அடுத்த "காரீப்" மகசூலில் அதாவது அக்டோபர் முதல் 1973 மார்ச் வரையில் அரசு 100 லட்சம் டன் உணவு தானியங்களைக் கொள்முதல் செய்ய வேண்டும்; ஆகஸ்டு முதல் மாதம் 9 லட்சம் டன் உணவுதானியங்களைக் கொள்முதல் செய்ய வேண்டும்; ஆகஸ்டு முதல் மாதம் 9லட்சம் டன் உணவு தானியங்களை அரசு வினியோகம் செய்தால் 1973 ஏப்ரல் இறுதியில் அந்த சமயம் அரசின் கைவசமுள்ள தானியங்களைவிட சற்று குறைவாகக் கையிருப்பு இருக்கும் என்று அந்த அறிக்கை கூறுகிறது.

இந்த அறிக்கை வெளியான பிறகு அரசின் கையிருப்பு தானிய விவகாரம் மேலும் மர்மமாகிவிட்டது.

### கையிருப்பே இல்லை

ஆகஸ்டு மாதம் முதல் அடுத்த ஏப்ரல் வரையில் 8 மாதங்களுக்கு 9 லட்சம் வீதம் வினியோகம் செய்தால், 72 லட்சம் டன்கள் வெளியே போகும். இவ்வாண்டில் 100 லட்சம் டன் கொள்முதல் செய்தால், அதிலேயே இந்த வினியோகத்திற்குப் பிறகு 23 லட்சம்

(4-ம் பக்கம் பார்க்க)

# காங்கிரஸ் தலைவரின் பொய்ப் பிரச்சாரம்

## புரமோத்தாஸ் கண்டனம்

கல்கத்தா, செப். 30—

தங்களுடைய கையாலாகாத்தனத்தையும், மக்கள் விரோதக் கொள்கைகளையும், மூடி மறைப்பதற்காக காங்கிரஸ் தலைவர் சங்கரதயாள் சர்மாவும், மேற்கு வங்கக் காங்கிரஸ் தலைவர் அருண்மித்ராவும் ஏனையகாங்கிரஸ்காரர்களும் மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சிக்கும் அமெரிக்க உளவு இலாகாவுக்கும் தொடர்புண்டு என்ற அருவருக்கத் தக்க அவதூறுப் பிரச்சாரத்தில் ஈடுபட்டுள்ளனர்.

காங்கிரசிற்கு எதிராக வளர்ந்து வரும் போராட்டங்களுக்கு தலைமை தாங்கும் மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சியை தாக்குவதற்காகவே இத்தகைய நீசத்தனமான பொய்ப் பிரச்சாரத்தில் இறங்கியுள்ளனர் என்று மேற்கு வங்க மாநில மார்க்சிஸ்ட் கட்சி செயலாளர் தோழர் புரமோத்தாஸ்குப்தா வன்மையாகக் கண்டனம் செய்தார்.

உலகத்தின் பரம எதிரி அமெரிக்க ஏகாதிபத்தியமென்றும், அதன்நாசகாரச் செயல்களை எதிர்த்து உலகமெங்கும் — இந்தியாவிலும் போராடிவரும் கம்யூனிஸ்டுகள்—மார்க்சிஸ்டுகள் மீது இத்தகைய அவதூறுபொழிவது வேடிக்கையாக இல்லையா? காங்கிரஸ்காரர்கள் இத்தகைய பிரசாரத்தின்மூலம் தங்களுடைய விஷமத்தனததையே வெளிப்படுத்துகின்றனர் என்ருர்.

### கூட்டத்திற்குத் தடை

மார்க்சிஸ்ட் கட்சியின் இயக்கங்கங்களைத் தடை செய்யவே இந்தப்பிரச்சாரம் செய்யப்படுகிறது என்பதற்கு மௌகத்தி என்ற இடத்தில் நடைபெற இருந்த மார்க்சிஸ்ட் கட்சியின் கூட்டத்தை அரசாங்கம் தடைசெய்திருப்பதே நல்லதொரு உதாரணம். வட வியத்நாம் அரசின் பிரதிநிதிக்கு வரவேற்பளிக்க நடந்த அந்தக் கூட்டத்தைத் தடைசெய்வதற்கு வேறு காரணமே இல்லை.

மேலும் அக்டோபர் 4லிருந்து நடைபெற இருக்கும் விலைவாசி உயர்வு எதிர்ப்பு இயக்கத்தின்போது, மார்க்சிஸ்ட் இயக்கத்திற்கு எதிரான காங்கிரஸ் இயக்கம் நடத்தவேண்டுமென்றுகாங்கிரஸ்காரர்களுக்கு சித்தார்த்த சங்கர் ரே வேண்டுகோள் விடுத்துள்ளதும், அதே குறிக்கோளுடன் தான் என்ருர். கலகங்களை உண்டுபண்ணி மக்களது இயக்கங்களை திசை திருப்பவே இந்த முயற்சி செய்யப்படுகிறதுஎன்று தோழர் புரமோத்தாஸ்குப்தா குற்றம் சாட்டினர்.

## தைவான் மக்கள் சீனத்தின் ஒரு பகுதியே

### கூட்டறிக்கையில் ஜப்பான் ஒப்புதல்

பீக்கிங், செப். 30—

சீனுவும், ஜப்பானும் உடனடியாக ஸ்தானிக உறவு ஏற்படுத்திக்கொள்ளுவதற்கு முடிவு செய்துள்ளன.

இதை சீனப்பிரதமரும், ஜப்பானியப் பிரதமரும் விடுத்த கூட்டறிக்கையில் அறிவித்துள்ளனர்.

தைவான் தீவு, மக்கள் சீனத்தின் பிரிக்க முடியாத ஒரு பகுதி என்பதை ஜப்பான் ஒப்புக்கொண்டது.

1937-ல் ஜப்பான சீனத்தின் மீது படை எடுத்து சீன மக்களுக்கு விளைவித்த நஷ்டங்களுக்காக ஜப்பான் மிகவும் வருந்துவதாக அறிவித்தது.

அந்த நஷ்டங்களுக்காக, இனிமேல் சீனு, ஜப்பானிடமிருந்து நஷ்ட ஈடு கோராதெனவும் கூட்டறிக்கையில் சீனப்பிரதமர் ஒப்பு கொண்டார்.

**இன்று முதல் "தீக்கதிர்" 15 காசுகள்**

# இடதுசாரி கட்சிகள் பேரணிக்கு எதிராக முதலமைச்சர் மிரட்டல்

## மே. வங்க கவர்னருக்கு தோழர் ஜோதிபாசு கடிதம்

கல்கத்தா, செப். 30—

இடதுசாரி கட்சிகள்நடத்தும் பேரணிக்கு எதிராக நடவடிக்கை எடுக்கப் போவதாக மேற்கு வங்க முதலமைச்சர் தொடர்ந்து மிரட்டி வருவதை மேற்கு வங்க கவர்னரின் கவனத்துக்குக் கொண்டு வந்து தோழர் ஜோதிபாசு கடிதம் எழுதியுள்ளார்.

மக்களின் சில அத்தியாவசியமான உடனடிக் கோரிக்கைகளை அடைவதற்காக இடதுசாரிக் கட்சிகள் அக்டோபர் 4-ம் தேதி ஊர்வலமும் பொதுக் கூட்டமும் நடத்துகின்றன.

மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சி, ஆர் எஸ் பி, எஸ் யூ சி, பார்வார்ட் பிளாக், (மார்சிஸ்ட்), தொழிலாளர் கட்சி, புரட்சி கம்யூனிஸ்ட் கட்சி, புரட்சி பங்களாகாங்கிரஸ் ஆகிய கட்சிகள் இந்தப் பேரணியை நடத்துகின்றன.

### காங்கிரசின் வன்முறை

இந்தப் பேரணி நடத்தப்படுவதின்நோக்கம் அரசாங்கத்துக்குத் தெரிந்திருந்தும் இதற்கு எதிராக நடவடிககை எடுக்கப் போவதாக முதலமைச்சர் மிரட்டி வருகிருர் என்றும், ஏதோ வன்முறையும் நாசவேலையும் செய்யப்போவதாக இடதுசாரிக் கட்சிகள் மீது அவா குற்றம் சாட்டியுள்ளார் என்றும் கவர்னருக்கு எழுதிய கடிதத்தில் ஜோதிபாசு குறிப்பிட்டுள்ளார்.

இதைத் தொடர்ந்து காங்கிரஸ் செயலாளர் பதில் நடவடிக்கை எடுக்குமாறு காங்கிரஸ் ஆதரவாளர்களைக் கேட்டிருப்பதையும் ஜோதிபாசு அந்தக் கடிதத்தில் குறிப்பிட்டுள்ளார்.

முதலமைச்சரும், காங்கிரஸ் செயலாளரும் சமிக்ஞை காட்டியிருப்பதைப் பின்பற்றி காங்கிரஸ் ஆதரவாளர்கள் வன்முறையாட்டத்தில் இறங்கி பழியை இடதுசாரிக் கட்சிகள் மீது போடும் வாய்ப்பு இருப்பதையும், ஜோதிபாசு அக் கடிதத்தில்சுட்டிக்காட்டியுள்ளார்.

# மங்களூரில் 10 ஆயிரம் பீடித் தொழிலாளர் ஊர்வலம்

மங்களூர், செப். 29—

மங்களூரில் தென் மாநில பீடித் தொழிலாளர் மாநாடு (தமிழ்நாடு, கேரளா, கர்ணடகம், ஆந்திரா) செப். 24, 25 தேதிகளில் நடைபெற்றது.

மரர்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சி அரசியல் தலைமைக் குழு உறுப்பினர் தோழர் ஏ. கே. கோபாலன் மாநாட்டை துவக்கி வைத்தார்.

தமிழ்நாடு சி. ஐ. டி. யூ. பொதுச் செயலாளரும், தமிழ்நாடு பீடித்தொழிலாளர் சம்மேளனத் தலைவருமான தோழர் ஆர்.உமாநாத் மாநாட்டில் சிறப்புரை ஆற்றினர்.

கேரள சி. ஐ. டி. யூ. தலைவர் தோழர் சி கண்ணன் மாநாட்டிற்கு தலைமைதாங்கினர். இம மாநாட்டிற்கு தமிழ்நாட்டிலிருந்து தமிழ்நாடு பீடித் தொழிலாளர் சம்மேளன பொதுசெயலாளர் தோழர். வே. கண்ணன், திருப்பத்தூர் பீடி தொழிலாளர் சங்கத் தலைவர் தோழர் கே. கிருஷ்ணசாமி, ஜோலார்பேட்டை பீடி தொழிலாளர் சங்கத்தலைவர் தோழர் கே. ஜி. காளிமுத்து, செயலாளர் ரத்தினம், வாணியம்பாடி பீடித் தொழிலாளர் சங்கச் செயலாளர் தோழர் எஸ். எம். அனீப், ஆம்பூர் பீடித் தொழிலாளர் சங்கத்தலைவர் தோழர் எஸ். நவாப்ஜான், செயலாளர் காந்திபாபு, பேர்ணும்பட்டு பீடித்தொழிலாளர் சங்கத் தலைவர் தோழர்எஸ்.இப்ராகீம், செயலாளர் ஏ. எம். லாலு, குடியாத்தம் பீடி தொழிலாளர் சங்க செயலாளர் தோழர் ஆர். பரமசிவம், சென்னை பீடி தொழிலாளர் சங்கச் செயலாளர் தோழர் எஸ் டி சண்முகம், உதவிச் செயலாளர் தோழர் சர்தார் மற்றும கேரளாவிலிருந்து 44 பிரதிநிதிகளும், கர்நாடகத்திலிருந்து 34 பிரதிநிதிகளும், ஆந்திரத்திலிருந்து 4 பிரதி நிதிகளும், 2 சகோதர பிரதி நிதிகளும் ஆக 100 பிரதிநிதிகள் கலந்து கொண்டனர்.

கர்ணடக சிஐடியூ தலைவர் தோழர் எஸ் சூரிய நாராயணராவ் மாநாடு தயாரிப்பு கமிட்டியின் ரிப்போர்ட் சமர்ப்பித்தார்.

தென்கன்னட சிஐடியூ தலைவரும், மாநாடு வரவேற்பு கமிட்டிதலைவருமான தோழர் ராமச்சந்திர ராவ் வரவேற்புரை நிகழ்த்தினர்.

தென் மாநில மாநாட்டை துவக்கிவைக்க மங்களூர் வத்திருந்த தோழர் ஏ கே ஜி, தோழர் அழிக்கோடன் ராகவன் படுகொலைசெய்யப்பட்டசெய்திகேட்டு மாநாட்டை துவக்கிவைத்து விட்டு சென்ருர்.

பின்னர் அவர் 25-ந் தேதி மாலை நடைபெற்ற மங்களூர் பொதுக்கூட்டத்திற்கு வந்திருந்தார்.

### ஊர்வலம்

25—9—72ந் தேதி 10ஆயிரம் பேர் அணி வகுத்த ஊர்வலம் புறப்பட்டது. அதில் 3 ஆயிரம் பெண் தொழிலாளர்கள் அணிவகுத்து வந்தனர்! செங்கொடிகளை ஏந்தி வந்த காட்சி மங்களூர் நகரத்தில் கண் கொள்ளாக் காட்சியாக இருந்தது.

மங்களூர் நகரத்தில் இது வரை எந்தக் கட்சியும் இம் மாதிரி மாநாடு நடத்தியதில்லை. ஆயிரக்கணக்கான தொழிலாளர்களையும் பெண் பீடித் தொழிலாளர்களையும் யாரும் திரட்டியதில்லை என்று மக்கள் பேசுகின்றனர்.

### பொதுக் கூட்டம்

மங்களூர் இடிமார்க்கட் எதிரிலுள்ள டவுன்ஹால் மைதானத்தில் 20 ஆயிரம் பேர் திரண்ட பிரும்மாண்டமான பொதுக்கூட்டம்நடைபெற்றது. மேடைக்கு எதிரில் கம்பீரமானசெங்கொடி சிகப்பு மின்சார விளக்குகளால் அலங்கரிக்கப்பட்ட கம்பத்தின் உயரே பறந்தது அந்த மைதானம் முழுவதும்

[4-ம் பக்கம் பார்க்க]

# மதுரையில் நெசவாளர்கள் மாபெரும் ஆர்ப்பாட்டம்

மதுரை, செப். 29—

சி.ஐ.டி. யூ. தமிழ்மாநிலக் குழுவின் அறைகூவலின படி மதுரையில் இன்று ஆயிரக்கணக்கான நெசவாளர்கள் கலெக்டர் அலுவலகம் முன் ஆர்ப்பாட்டம் செய்தனர்.

மதுரைநகர், செல்லூர் ஆகிய பகுதிகளில் உள்ள ஏராளமான கைநெசவுத் தொழிலாளர் மாபெரும் ஊர்வலமாக வந்து இந்த ஆர்ப்பாட்டத்தில் கலந்து கொண்டனர்.

இன்று காலை 10-30 மணிக்கு முனிச்சாலையிலிருந்து ஊர்வலம் புறப்பட்டு முக்கிய வீதிகள் வழியாக கலெக்டர் அலுவலகம் வந்து சேர்ந்தது. ஊர்வலத்தில் மாதர் சங்கத்தினரும் கலந்து கொண்டார்கள்.

### கோரிக்கை முழக்கம்

25 சதம் கூலி உயர்வு வேண்டும்.

8·33 சத போனஸ் வேண்டும்.

சட்டப்பாதுகாப்பு வேண்டும்.

கூலி நிர்ணயச்சட்டம் வேண்டும்.

நூல், பட்டு, சாயம் குறைந்த விலையில் சர்ககார் டிப்போ மூலம் வழங்க வேண்டும்.

அரிசி, பருப்பு, எண்ணை ரேஷன் கார்டு மூலம் பாதி விலைக்கு நிவாரணமாக வழங்கவேண்டும்.

வீவிங் சென்டர் அமைக்க வேண்டும்.

வீட்டடி மனை வேண்டும்.

தேங்கிய கைத்தறி ஜவுளிகளை சர்க்கார் கொள்முதல் செய்யவேண்டும்.

விசைத்தறிகளைப் புகுத்தாதே.

போன்ற கோரிக்கை முழக்கங்களை முழங்கி வந்தனர்.

ஊர்வலம் கலெக்டர் அலுவலகத்தை அடைந்ததும், அனைத்து சங்கப் பிரதிநிதிகளும் கலெக்டர் ஊரில் இல்லாததால் கலெக்டரின் தனி உதவியாளரிடம்கோரிக்கை மகஜரை அளித்தனர். இந்த மகஜரை அரசுக்கு உடனடியாக அனுப்பி வைப்பதாக அதிகாரி வாக்களித்தார்.

அதிகாரியுடன் நடந்த பேச்சுவார்த்தைகள் பற்றி சங்கப் பிரதிநிதிகளான கே. அய்யாவு, ஜெ. எஸ். கிருஷ்ணமூர்த்தி, குப்புசாமி, ராஜாராம், எம். கணபதி, எம். கே. ராஜகோபால் ஆகியவர்கள் வெளியே கூடியிருந்த கைநெசவாளர்களிடம் விரிவாக எடுத்துரைத்தனர்.

நெசவாளர்களின்கோரிக்கைகளை அரசாங்கம் உடனடியாக நிறைவேற்றுவிட்டால், அடுத்தகட்டப் போராட்டத்திற்கு நெசவாளர்கள் தயாராவார்கள் என்று சங்கத் தலைவர்கள் எச்சரித்தனர்.

# தலைமையைப் பிடிக்க காங்கிரசில் கோஷ்டிச் சண்டை

புதுடெல்லி செப் 27-

காங்கிரஸ் கட்சிக்குள் போலி அங்கத்தினர் சேர்க்கை பற்றி பெரும் புகார்கள் எழுந்துள்ளன.

கட்சி கமிட்டிகளைப் பிடிப்பதற்காக சில மாநிலங்களில் காங்கிரஸ் கோஷ்டிகளிடையே போட்டா போட்டிகளின் விளைவாகவே இந்த நிலைமை உருவாகியுள்ளது.

உத்திரப் பிரதேசம், குஜராத், மகாராஷ்டிரா, மத்தியப் பிரதேஷ் மாநிலங்களில் பெரும் அளவிலும், மற்ற மாநிலங்களில் கணிசமாகவும் போலி அங்கத்தினர்கள் சேர்க்கப்பட்டிருப்பதாகவும் கூறப்படுகிறது. அ இ காக தணிக்கை முடிதத பின்னர் உண்மை தெரியவரும.

சென்ற வருடததை விட இந்த வருடம் உறுப்பினர் எண்ணிக்கை சில மாநிலங்களில் அதிகமாக இருக்குமென்று யு என் ஐ செய்தி ஸ்தாபன கணிப்பு ஒன்று கூறுகிறது.

### போலி அங்கத்தினர்கள்

போலி அங்கத்தினர்கள் மூலமும், கறுப்புப்பணத்தின் மூலமும் கட்சி ஸ்தாபனத்தைப் பிடிக்க சிலர் முயன்றுள்ளதாக சில மாநிலங்களின் உயர்மட்டத் தலைவர்களே குற்றம் சாட்டியுள்ளனர்.

பிரச்சினையைத் தீர்ப்பதற்கு அனேகமாக எல்லா மாநிலங்களுக்கும் அ இ. கா. க. தன் பார்வையாளர்களை அனுப்பியுள்ளது-

உத்திரப்பிரதேசத்தில் 20 லட்சத்து 25 ஆயிரம் உறுப்பினர்கள் சேர்க்கப்பட்டுள்ளனர். பல்லாயிரக் கணக்கானவர்கள் போலி அங்கத்தினர்கள் என்ற குற்றச்சாட்டுகளும் எதிர்க் குற்றச்சாட்டுகளும், எழுந்துள்ளன.

### திடீர் தீவிரம்

உ. பி. யில் சமீப காலம் வரை உறுப்பினர்சேர்க்கை இயக்கம் மந்தமாகத்தான் இருந்தது. பின்னர் தீவிரமாகி விட்டது.

1969-ல்கட்சிப்பிளவுபடுவதற்குமுன்பு உறுப்பினர்கள் எண்ணிக்கை பத்தரை லட்சமாகத்தான் இருந்தது. கிட்டத்தட்ட இரண்டுமடங்காக இப்போது ஆகியுள்ளது.

குஜராத்தில் அகமதாபாத் பரோடா, சூரத், ராஜ்காட் முதலிய இடங்களில் போலி அங்கத்தினர் சேர்க்கை அதிகமாகியிருப்பதாக தகவல் வந்துள்ளது, அகமதாபாத்தில் ஒரு லட்சத்து

[4-ம் பக்கம பார்க்க]

தீக்கதிர்

# மலையைக் கெல்லி எலியைப்பிடித்தகதை

ஜூலை மாதம் 15 தேதி நாடாளுமன்றம் கூடின அன்றே விலைவாசி ஏற்றப் பிரச்சினை காரசாரமாக விவாதிக்கப்பட்டது. இந்திரா அரசின் சார்பாக கூட்டு நடவடிக்கை எடுப்பதுபற்றி துரிதமாக திட்டம் வகுப்பதாக வாக்குறுதிகள் அளிக்கப்பட்டன.

மாதங்கள் உருண்டோடி விட்டன. ஆட்சியாளர்கள் எத்தனை மட்டங்களில் ஆலோசனை நடத்தி வருகிறார்கள்! உணவு, விவசாய இலாகா அமைச்சரகம், அமைச்சரவையின் பொருளாதார உப கமிட்டி, காங்கிரஸ் காரியக்கமிட்டி, திட்டக் கமிஷன் இவ்வளவு மட்டங்களில் விவாதித்தாகிவிட்டது.

இவ்வளவுக்குப் பிறகு முதலமைச்சர்களின் கூட்டம் ஒன்று டில்லியில் செப்டம்பர் 30ம் தேதி கூட்டப்பட்டிருக்கிறதாம். அதில் இவ்விஷயம் விவாதிக்கப்படும் என்று அறிவிக்கப்பட்டுள்ளது.

விவசாயப் பொருள்களின் விலைக் கமிஷன் என்று ஒரு நிரந்தர ஸ்தாபனம் இருக்கிறது. ஆண்டுதோறும் எவ்வளவு உணவு தானயங்கள் அரசுமூலமாக வினியோகிக்கப்படவேண்டும், அதற்கு எவ்வளவு கொள்முதல் செய்யவேண்டும்! இவைகளைப் பற்றி சிபாரிசு செய்வதே அந்த நிரந்தரக் கமிஷனின்வேலை.

இந்தக் கமிஷன் நெல் விலையை குவிண்டாலுக்கு இதுவரை கொடுத்ததைவிட குவிண்டாலுக்கு தரத்துக்குத்தக்கவாறு 1 அல்லது 2 ரூபாய் அதிக விலை கொடுக்க வேண்டும் எனறு சிபாரிசு செய்திருக்கிறது. இதுவல்ல அதன் முக்கியமான சிபாரிசு.

போன ஜூலை மாதத்தில் அரசின் மூலமாக இந்தியா பூராவிலும் 8½ லட்சம டன்கள் வினியோகிக்கப்பட்டதாம். விலைவாசிகள் ஏறிவிட்டதால். அடுத்த ஏப்ரல் மாதம்வரையில் மாதம் 9 லட்சம் டன்கள் வினியோகிக்க வேண்டுமாம். இதற்காக வேண்டி, இந்த ஆண்டு 40 லட்சம் டன்கள் அரிசியும், 60 லட்சம் டனகள இதர தானியங்களும் கொள்முதல் செய்ய வேண்டும் என்று சிபாரிசு செய்துள்ளது.

முதலமைச்சர்கள் கூட்டத்தில் வீவாதித்து முடிவு எடுப்பதற்கு இந்த ரிப்போர்ட்டுதான வைகக்கப்பட்டுள்ளது.

விலைவாசியைக் குறைப்பதற்காகபெரியஅளவு நியாயவிலைக் கடைகளைத் திறக்கப்போவதாக இந்திரா காந்தி இம் மாதம் விசாகப்பட்டினத்தில் கூறினார்கள். இது வாசகர்களுக்கு ஞாபகமிருக்கும்.

ஜூலையில் 8·5 லட்சத்திலிருந்து இனி,மாதம் 9 லட்சம டன்கள் உணவு தானியங்கள வினியோகம் செய்ய வேண்டும் என்று சிபாரிசு செய்யப்பட்டிருக்கிறதே. அதுதான் அந்த அதிக அளவு நியாய விலைக் கடைகளை திறக்கும் லட்சணம்.அதாவது இதுவரையில் 17 நியாயவிலைக் கடைகள் இருந்தால், இனி அது 18 கடைகளாக உயரும். அவ்வளவுதான்.

இதற்குத்தான் இந்த மூன்று மாத காலத்திய ஆராய்ச்சிகள். இவ்வளவு மேதைகளுமாகச் சேர்ந்து மலையைக் கெல்லி பிடிதத எலி இது தான்!

## பட்டினிச் சாவுகள்

ஆந்திர மாநிலத்தில் கடும் வறட்சி நிலைமை நிலவுகிறது. இதுவரை பட்டினியால் 80பேர்கள்மாண்டுவிட்ட நெஞ்சை உருக்கும் செய்தி வந்துள்ளது.

தெலிங்கானா பகுதியிலுள்ள 9 மாவட்டங்களிலும் குடிக்கக்கூட தண்ணீர் இல்லாமல் மக்கள் அவதியுறுகின்றனர்.

பல குக்கிராமங்களில் தாகத்தின் வறட்சியை தாங்க முடியாமல் மக்கள் கிணறு, குளங்களின் அடி மட்டத்தில் தேங்கியுள்ள சேறும், சகதியும் கலந்த மண்டித் தண்ணீரைக் குடிக்கும் அவல நிலைமை உள்ளது.

சுமார் 15 லட்சம் ஏக்கர் நிலத்தில் விவசாயம் பாதிக்கப்பட்டுள்ளதாக அறிவிக்கப்பட்டுள்ளது.

மாபூட் நகர் மாவட்டத்திலுள்ள 5 ஆயிரம் ஏரிகளில், 4 ஆயிரம் ஏரிகளில் சொட்டுத் தண்ணீர்கூட இல்லாமல் வறண்டு உள்ளது. அதுபோலவே மூசி ஆறு, மற்றும் திண்டி, பெண்லி பக்காலா, பீமனபள்ளி, ஆசிப்நாகர் போன்ற சிறிய நீர்ப்பாசன அணைகளும் தண்ணீர் இல்லாமல் வறண்டு கிடக்கின்றன.

இந்த கடும் வறட்சி நிலைமையால் வேலையும் கிடைக்காமல் அவதியுறும் ஏழை விவசாயிகள் பட்டினியால் வாடுகின்றனர்.

சூரியப் பேட்டையைச் சேர்ந்த ஆயிரக் கணக்கான ஏழை விவசாயிகள் வேலைகொடு! எனறு தினநதோறும் வருவாய்த்துறை அலுவலகங்களின் முன்பு ஆர்ப்பாட்டம் நடத்திக்கொண்டிருககின்றனர்.

ஏழை மக்களின் இந்த வறுமை நிலையை இடையிலுள்ள கொள்ளை லாப வியாபாரிகள் பயன்படுத்திக் கொள்கின்றனர்.

எல்லாரெட்டி என்ற நகரில் தங்களிடமுள்ள நகைகள், சின்னஞ்சிறிய ஆபரணங்கள், தட்டு முட்டு சாமான்களை குறைநத விலைகளுக்கு வியாபாரிகள் அபகரித்துக கொண்டுள்ளனர்.

பட்டினியால் தினம், தினம் செத்துக் சொண்டிருக்கும் ஏழை மக்களுக்கு நிவாரணம் அளிகக உடனடியாக நிவாரண வேலைகளில ஈடுபடாமல், ஆந்திர மாநில அறநிலைய அமைச்சா கோயில்களில் விசேஷ பூஜை நடத்த உத்திரவிட்டுள்ளார். என்ன மடத்தனம்!

உடனே வறட்சியால் பாதிக்கப்பட்ட பகுதிகளை பஞ்சப்பிரதேசம் என்று அறிவித்து நிவாரண வேலைகளை துவக்க வேண்டும். உணவுப் பொருள் சப்ளையை துரிதப்படுத்த வேண்டும. காங்கிரஸ் ஆட்சியாளர் செய்வார்களா?

இந்த 20-ம் நூற்றாண்டிலும் மக்களை பட்டினியால் சாகவிடும் அவலநிலையில் வைத்துள்ள இந்திராகாங்கிரஸ் ஆட்சியாளர்களைக் கேட்கிறோம். உங்களது ஏழை பங்காளர் வேடம் என்னவாயிற்று?

# தேர்தலில் வெற்றி பெற நிக்சனின் புதிய சாகசம்

## யுத்த நிறுத்த வதந்தி பற்றி வடவியத்நாம் பிரதிநிதி

லாஸ் ஏஞ்செல்ஸ், (அமெரிக்கா) செப் 30—

அமெரிக்க ஜனாதிபதி நிக்சன் தன்னுடைய குடியரசுக் கட்சிக்காரர்களுக்கு அளித்த விருந்து ஒன்றில் பேசும்போது ''எமது கூட்டாளிகளைக் காட்டிக் கொடுக்காமலேயே, வியத்நாம் யுத்தத்திற்கு ஒரு முடிவு காணப் போகிறோம். இது தேர்தலுக்காக நடத்தும அரசியலல்ல. சமாதானத்துக்காக நடத்தும் அரசியல். என்னுடைய நான்காண்டு கால நிர்வாகம், இந்த யுத்தத்திற்கு ஒரு முடிவு கண்ட நிர்வாகம் என்ற பெயர் பெறும். இந்த யுத்தம் எனக்கு முந்தைய நிர்வாகங்கள் விட்டுச் சென்ற ஒன்று. இன்று யுத்தத்தை நிறுத்துவதோடு, எதிர்காலத்திலும் யுத்த அபாயங்கள்ஏற்படாதிருக்க எனது நிர்வாகத்திற்கு சீனவுடனும், சோவியத்யூனியனுடனும் உடன்பாடு சாணும் ஒருகொள்கையைத்துவக்கி வைத்தது என்ற பெயர் வரலாற்றில் இடம் பெறும்'' எனறு பேசினார்.

அமெரிக்க மக்களது சமாதான விருப்பங்களை கணக்கில் எடுத்துக் கொள்ளவில்லை.எப்படியாவது அமெரிக்கத் தேர்தலில் வெற்றியடைய நிக்சன் இத்தகைய புதிய சாகசம் புரிய முன் வந்திருப்பதைப் பற்றி பல ஏடுகள்சீக்கிரமே வியத்நாம் யுத்தம் ஒரு முடிவுக்கு வரப் போகிறது என்றும், நிக்சனின் பிரதிநிதி டாக்டர் கிசிங்கர் பாரிசில் வியத்நாம் பிரதிநிதிகளுடன் ரகசியமாகப் பேசி ஓர் ஒப்பந்தம் செய்து கொண்டுள்ளார் எனறும் செய்திகள் வெளியிட்டுள்ளன.

### வியத்நாம் மறுப்பு

பாரிஸ், செப். 29—

பாரிஸ் பேச்சு வார்த்தையில் கலந்து கொண்டுள்ள வியத்நாம் பிரதிநிதிகள் இந்த வதந்திகளை மறுத்தனர் 'உண்மை நிலவரமல்ல என்றும் எங்களது நிலைக்கும் அமெரிக்க நிலைக்கும வெதூரம் இடைவெளியுள்ளது'' என்றும் வடவியத்நாம்பிரதி ஜுவான் தூவி அறிவித்தார்.

# மாணவர்கள் மீது தி. மு. க. தாக்குதல்

## திருவை தமிழ் கல்லூரி மூடப்பட்டது

திருவையாறு, செப். 29—

தஞ்சை மாவட்டம் திருவையாறு தமிழ்க் கல்லூரி மாணவர்களிடையே ஏற்பட்ட மோதலைத் தொடர்ந்து கல்லூரி மூடப்பட்டது.

திரு. அண்ணாத்துரையின் படத்திறப்பு விழா நடத்துவதற்காக மாணவர்களில்சில குறிப்பிட்ட தி.மு.க மாணவர்கள்முயன்றனர். இதற்காக மாணவர்களின் ஒருமித்த ஆதரவையோ, அல்லது பெரும்பான்மையோரின் ஆதரவையோ பெற தி.மு.க. மாணவர்களால் இயலவில்லை.

மாருக சில உள்ளூர் தி. மு. க. பிரமுகர்களின் வற்புறுத்தலின் பேரில் தி. மு. க. ஆதரவு மாணவர்கள் தன்னிச்சையாக படத் திறப்பு விழா நடத்த ஏற்பாடு செய்தனர்.

இதனைக் கண்டித்து மற்ற மாணவர்கள் கல்லூரி முதல்வரிடம் முறையிட்டனர். இதனைக்கூட பொறுத்துக் கொள்ள இயலாத தி. மு. க. மாணவர்கள் ஆத்திரப்பட்டு அவர்களைத் தாக்கியுள்ளனர். இதனால் இரு தரப்பினருக்கும் கைகலப்பு ஏற்பட்டது.

முன் கூட்டியே திட்டமிட்டபடி உள்ளூர் தி. மு. க. வினர் வெளியாட்களை ஏவிவிட்டு மாணவர்களைத் தாக்கியுள்ளனர்.

தி மு க வினரின் இச் செயலைக்கண்டித்து இந்திய மாணவர் சங்கத்தின் தஞ்சை மாவட்டக் குழுவின அமைப்பாளர் பெ. மணியரசன் அறிக்கை விடுத்துள்ளார்.

### சங்ககிரியில்

# பெண்கள் உண்ணாவிரதம் 15-வது நாள்

சங்ககிரி, செப். 27—

சங்ககிரி இந்தியா சிமெண்ட் நிர்வாகத்தால் பழி வாங்கப்பட்டுள்ள தொழிலாளர்களை மீண்டும் வேலைக்கு எடுக்கக்கோரி சங்ககிரி சிமெண்ட் ஆலைத் தொழிலாளர் முன்னேற்ற சங்கம் தொடர்ந்து போராடி வருகிறது.

கோரிக்கைகளை வலியுறுத்தி 13—9—72ந் தேதி முதல் ஆலை முன்பு ''பெண்கள்'' (தொழிலாளிகளின் மனைவிகள்) தங்கள் கைக் குழந்தைகளுடன் உண்ணாவிரதப்பந்தலில் தொட்டில் கட்டிப்போட்டுக்கொண்டு தொடர்ந்து உண்ணாவிரதம் இருந்து வருகின்றனர். 15-வது நாளாக இன்று திருமதி சம்பூர்ணம் மேற்கண்ட கோரிக்கையை வலியுறுத்தி தனது 24 மணி நேர தொடர் உண்ணாவிரததை மேற்கொண்டு வருகின்றார்.

### சி. ஐ. டி. யூ. சங்கங்கள் உண்ணாவிரதம்

பல மாதங்களாகப் போராடிக் கொண்டிருக்கும் இத்தொழிலாளர்களுக்கு ''அரசு'' எவ்வித தீர்வும் வழங்காது அலட்சியம் காட்டி வருவதைக் கண்டித்தும், உடனே தலையிட வலியுறுத்தியும், பழி வாங்கப்பட்டுள்ள தொழிலாளர்களை வேலைக்கு எடுத்துக் கொள்ள வற்புறுத்தியும் 13—9—72 முதல் சேலம் கலெக்டர் அலுவலகம் முன்பு சேலம்மாவட்ட சி ஐ டி யூ தொழிற் சங்கங்கள் உண்ணாவிரதம் இருந்து வருகின்றனர்.

அதன்படி 25-9-72 முதல் 1—10—72 முடிய சேலம் மாக்னிசைட் லேபர் யூனியன் தொழிலாளர்கள் உண்ணாவிரதம் இருந்துவருகின்றனர்.

இடைவிடாதுதொடர்ந்து நடைபெற்றுவரும் இத் தொழிலாளரின் போராட்டம் குறித்து இதுவரை அரசு எவ்வித நடவடிக்கையும் இன்றி இருந்து வருவதால் ஒரு விரிவானபோராட்டத்தில் இறங்க தொழிலாளர்கள் முடிவு செய்துள்ளனர்.

### ஊராட்சித் தலைவர்கள் ஆதரவு

இத் தொழிலாளர்களின் கோரிக்கைக்கு ஆதரவு தெரிவித்து இந்தியா சிமெண்ட் நிர்வாகம அநியாயமாக பழிவாங்கியுள்ள தொழிலாளர்களை உடனடியாக வேலைககு எடுத்துக் கொள்ள வேண்டும் என்று வற்புறுத்தியும்,தமிழக முதலமைச்சர் உடனடியாக இப்பிரச்சனையில் தலையிட்டு-பல மாதங்களாக அவதியுற்று வரும் தொழிலாளர்களுக்கு நீதி வழங்கி தீர்வு காணவேண்டும் என்று கோரியும், சங்ககிரி வட்ட ஊராட்சி மன்ற தலைவர்களும்,பேரூராட்சிமன்றத்தலைவர்களும் தமிழகமுதலமைச்சருக்கு 'மகஜர்' அனுப்பியுள்ளனர்.

தமிழ் மாநில சி ஐ டி யூ தொழிற்சங்கங்கள், மற்றும சகோதர தொழிற்சங்கங்கள், வேலை நீக்கம் செய்யப்பட்ட 25 தொழிலாளர்களையும் மீண்டும் வேலைக்கு எடுக்க வலியுறுத்தி தந்திகளை அனுப்பி வைக்கின்றனர்.

# தொழிற் சங்கக் கவுன்சில் கூட முட்டுக்கட்டை

புதுடெல்லி, செப். 26—

மத்திய தொழிற் சங்க தேசீய கவுன்சில் கூட்டம் செப் 27ல் நடைபெற இருந்ததில் தடங்கல் ஏற்பட்டுள்ளது.

கடைசி நிமிடத்தில் எச். எம். எஸ். சங்கம் தங்களுக்கு வரசந்தர்ப்பம் இல்லை எனக் கூறிவிட்டது.

இந்த கூட்டத்தைக் கூட்டும் ஐ. என். டி. யூ. சி.க்கு எச். எம். எஸ். பொதுச் செயலாளர் மகேஷ்தேசாய் எழுதியுள்ள கடிதத்தில் கூட்டத்திற்கு வர தங்களுக்கு தறபோது சௌகரியம் இல்லை: ஆதலால் வேறொரு தேதியில் கூட்டத்தை கூட்டுமாறு எழுதியுள்ளார்.

### கருத்து வேற்றுமை

இவ்வாறு கடைசி நிமிடத்தில் எச். எம். எஸ். அறிவித்துள்ளது. தேசீயக் கவுன்சிலின் முன்று உறுப்பினர்களிடையே நிகழ்ந்துள்ள கருத்து வேற்றுமைகளை காட்டக் கூடியதாக உள்ளது என அரசியல் வட்டாரத்தில் கூறப்படுகிறது.

மத்திய தொழிலாளர் அமைச்சர் காடிலகாரின் முயற்சியின் பேரில் மே 21-ல் இந்தக் கவுன்சில் அமைக்கபபட்டது. 9 நாட்கள் கழித்து முதல் கூட்டம நடைபெற்றது. கூட்டத்தில் போனஸ், சிமெண்ட்தொழிலில் வேலை நிலைமை, ஊதிய விகிதம் பற்றி விவாதிக்கப்பட்டது. செப் 13-ல் நடந்த இரண்டாவதுகூட்டத்திலபோனஸ் பற்றி விவாதிக்கப்பட்டது.

குறைந்தபட்ச போனஸ் வரமபு கோரிக்கையை விட்டதால் எந்த பொதுப் பிரச்சினையின் மீதும் இந்த மூன்று உறுப்புகளும இணைநதிருக்கவில்லை.

சர்வதேச தொழிலாளர் மாநாட்டிற்கு பிரதிநிதிகளை அனுப்புவது சமபந்தமாக இநத மூனறு உறுப்புகளிடையே மோதல் இருந்தது.

ஒரு ஐ என் டி யூ சி பிரதிநிதியும், ஏ ஐ டி யூ சி ஆலோசகர் ஒருவரும், எச் எம் எஸ் ஆலோசகர் ஒருவரும செல்லலாம் எனற யோசனையை ஏ ஐ டி யூ சியும், எச் எம் எஸ்ஸும் நிராகரித்துவிட்டன. இப்பிரச்சனை பிரதம மந்திரியின் தலையீட்டிற்குக் கொண்டு சென்றும் தீர்வு காண முடியவில்லை.

சிமெண்ட் போராட்டத்தில் ரூ. 25 இடைக்கால நிவாரணத்தை ஏற்று ஐ என் டி யூ சி தானுக விலகியதும் சிக்கலை உண்டு பண்ணியுள்ளது.

மத்தியக் கவுன்சில் கூட்டம் இருமுறை நடைபெற்றும் முக்கியமான பிரச்னைகள் எதிலும் தீர்வுகாண முடியவில்லை.

### 5 மாதமாக சம்பளம்இல்லை

# பேரூராட்சி சிப்பந்திகள் கிளர்ச்சி

மதுரை, செப். 28—

மதுரைத் தாலுகா பரவை பேரூராட்சி மன்ற சிப்பந்திகளும், ஊழியர்களும் தங்களுக்கு 5 மாதமாகச் சம்பளம் கொடுக்காததைக் கண்டித்து கடந்த 28-ந்தேதி காலையில் ஆர்ப்பாட்டம் செய்தனர்.

இந்த ஆர்ப்பாட்டத்துக்கு தோழர் செந்திவடிவேல் தலைமை வகித்தார்.

உடனடியாகச் சம்பளம் கொடுக்கக் கோரியும், பிரவிடண்ட்பண்டுகணக்குக்கு ரசீது கோரியும் முழக்கம் எழுப்பிக் கொண்டு ஊர்வலமாக வந்து பேரூராட்சி அலுவலகம் முன்பு ஆர்ப்பாட்டம் செய்தனர்.

# மேற்கு ஐரோப்பிய நாகரீகம்

லண்டன், செப். 28—

சர்வதேச அழகிப் போட்டிகளோடு இனி மேற்கு ஐரோப்பிய அழகிப் போட்டிகளும் நடைபெறப் போகிறது. விரிவாக்கப்பட்ட ஐரோப்பியப் பொது மார்க்கெட்டோடு சம்பந்தப்பட்ட பத்து நாடுகளின் அழகிப் போட்டி நடைபெற இருக்கிறது. இதனை மிஸ் உலக அழகிப் போட்டியை நடத்துபவர்களே அண்மையில் லண்டனில் தெரிவித்தனர். இந்தப் போட்டியின் இறுதித் தேர்வு அடுத்த ஆண்டில் பிரஸ்ஸல்ஸில் நடைபெறும்; இதில் வெற்றி பெறும் அழகி ''மிஸ் ஐரோப்பா'' என்று அழைக்கப்படுவாள். இவ்வாறு அழைக்கப்படுவதைக் காட்டிலும் ''மிஸ் பொது மார்க்கெட்'' என்று அந்த அழகுராணியை அழைப்பதே பொருத்தமாகும் என்று சிலர் கூறுகிறார்கள்.

# இத்தாலியில் இறைச்சி வியாபார மோசடி

ரோம், செப். 28—

வடக்கு இத்தாலியில் ''பிரேஜில் நாட்டு மாட்டிறைச்சி'' மிகச் சுறுசுறுப்பாக விற்பனையாகி வந்தது. ஆனால் அது பிரேசில் நாட்டு மாட்டிறைச்சிஅல்ல என்றும், இத்தாலியநாட்டுக் குதிரை இறைச்சிதான் என்றும் இத்தாலியச் சுகாதார அமைச்சகம் அண்மையில் கண்டறிந்து செய்தி வெளியிட்டது.

இத்தாலியில் போதிய மாட்டிறைச்சி இல்லாத காரணத்தால் இத்தாலியில் உள்ள இறைச்சி வியாபாரிகள் சிலர் 228 டன் எடையுள்ள குதிரை இறைச்சியையே 'இறக்குமதி செய்யப்பட்ட' மாட்டிறைச்சி என்ற பெயரில் விற்பனை செய்துவிட்டனர்.

அது மட்டுமல்ல, அவர்கள் 'அர்ஜண்டினா நாட்டு மாட்டிறைச்சி' என்ற பெயரால் 450 டன் இறைச்சியும் விற்றனர். இதிலும் கிட்டத்தட்ட மூன்றில் ஒரு பகுதி இறைச்சிக்கும் அர்ஜெண்டினாவுக்கும் எவ்விதச் சமபந்தமுமில்லை என்ற உண்மையும் அம்பலமாகியுள்ளது.

## நடக்க இருப்பவை

### பிரச்சாரபொதுக்கூட்டங்கள்

4—10—72

திருக்காட்டுப்பள்ளி

5—10—72

திருவாரூர்

இவ்விரு இடங்களிலும்

தோழர் ஆர். உமாநாத்

பேசுவார்.

### விலைவாசிஉயர்வு எதிர்ப்புப் போராட்டம்

# சென்னை - செங்கை தயாராகிறது

சென்னை. செப். 28—

விலைவாசி உயர்வையும், வேலையில்லாத் திண்டாட்டத்தையும் எதிர்த்து சென்னை — செங்கையில் விரிவான பிரச்சாரம் செய்யப்பட்டு வருகிறது

மதுரையில் கூடிய மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சியின் மாநிலக் குழு முடிவுப்படி சென்னையில் அக் 6, 7, 8 ஆகிய 3 நாட்கள் உண்ணாவிரதம் இருக்க முடிவு செய்யப்பட்டுள்ளது.

இவ்விரு மாவட்டங்களிலும் மொத்தம் 31 இடங்களில் தோழர்கள் உண்ணாவிரதம் இருப்பர்.

அடுத்த கட்டமாக அக் 18, 19, 20 ஆகிய மூன்று தேதிகளில் 3 இடங்களில் மறியல் போராட்டம் நடக்கிறது

18-ந் தேதியன்றுமவுண்ட் ரோடு போஸ்டாபீஸ் முன்பு தோழர் வி பி சிந்தன் தலைமையில் மறியல் நடைபெறுகிறது. 19-ந்-தேதி ஜெனரல் போஸ்டாபீஸ் முன்பு தோழர் பி ஆர் பரமேஸ்வரன் தலைமையிலும், 20-ந்தேதி கலெக்டர் ஆபீஸ் முன்பு தோழர் கே எம் அரிபட் தலைமையிலும் மறியல் நடைபெறுகிறது.

# அழிக்கோடனுக்கு அஞ்சலி

### உடுமலையில்

உடுமலை, செப். 28

அரசியல் எதிரிகளால் குத்திக்கொலைசெய்யப்பட்ட மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சியின் கேரள மாநில செயற்குழு உறுப்பினர் தோழர் அழிக்கோடன் ராகவனுக்கு அஞ்சலி செலுத்தி செப். 24-த் தேதி மாலை 6 மணிக்கு இங்கு மௌன ஊர்வலம நடத்தப்பட்டது.

மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சி, சி. ஐ. டி. யூ, விவசாயிகள் சங்கம் ஆகியவற்றின் சார்பில் இந்த ஊர்வலம் நடந்தது.

ஊர்வலத்தின் இறுதியில் பஸ் நிலையம் முன்பு நடந்த கூட்டத்தில் தோழர்கள் சென்னியப்பன், பார்த்தசாரதி ஆகியோர் பேசினர். மறைந்த தலைவருக்கு 5 நிமிடம் மௌன அஞ்சலி செலுத்தப்பட்டது.

### திருச்சி எரிசாராயத் தொழிலாளர் அஞ்சலி

திருச்சி, செப். 28—

இங்குள்ள எரிசாராயக் கமபெனி ஊழியர்கள் மறைந்த தலைவர் அழிக்கோடன் ராகவனுக்கு அஞ்சலி செலுத்தினர்.

செப். 26-ந் தேதியன்று அனுதாப ஊர்வலம் கம்பெனிகேட்டிலிருந்துதோழர் டி. எம். தாவூத் தலைமையில் புறப்பட்டு செந்தண்ணீர்புரம் செங்கொடி திடலில் முடிந்தது.

அங்கு நடந்த கூட்டத்தில் தோழர் அழிக்கோடனின் சேவைகளை விளக்கி தோழர் கே. வி. எஸ் இந்துராஜ் உரையாற்றினர். 2 நிமிடம் மௌன அஞ்சலி செலுத்தப்பட்டது.

### விமானக் கடத்தலைத் தடுக்க

# மோப்ப நாய்கள்

வாஷிங்டன், செப். 28—

விமானங்களைக் கடத்திச் செல்வதும், பணயப் பணம கேட்பதும் விமானப் போக்குவரத்தில் அதிகமாகிக் கொண்டு வருவதைக் கண்டு, அமெரிக்க விமானக் கம்பெனிகள் இந்த அபாயத்தை முறியடிக்கப் புதிய வழிகளை ஆராய்ந்து வருகின்றன.

இம் முயற்சியில், ஒருதனியார் துப்பறியும் கமபெனியின் உரிமையாளரான ஆல்பர்ட் பிளாக் என்பவர் ஆயுதந்தாங்கிய காவளர்களுக்குப் பதிலாக பிரத்தியோகப் பயிற்சியளிக்கப்பட்ட ஜெர்மன் மந்தை நாய்களை உபயோகிக்கலாம் என்று யோசனை கூறியுள்ளார். இதனை அவர் நாயை கொண்டு நடத்தியும் காட்டியுள்ளார்.

இவர் பழக்கிவிட்ட ஒரு நாயை விமானத்தினுள் அனுப்பி அங்கு மறைத்து வைக்கப்பட்டிருந்த ஒரு பிஸ்டலையும், ஒரு துப்பாக்கியையும், கரு மருந்து வாடை படிந்த துணிஇருந்த ஒரு சூட்கேசையும், ஒரு பாக்கெட் கஞ்சாவையும் மோப்பம் பிடித்து காட்டிக் கொடுத்தது.

மேலும், விமானப் போக்குவரத்து சங்கத்தின் துணைத் தலைவரான அல்போன்னர் என்பவர் விமானக் கடத்தலில் ஈடுபட்ட ஒருவனை ஒப்புக் கொண்டு, பறக்கும் விமானத்தில் இருந்துகொண்டு, ஒரு கைத்துப்பாக்கியை வெளியில் எடுத்ததும், அந்த நாய் அவர் மீது பாய்ந்து அந்தக் கைத்துப்பாக்கியைத் தட்டிப் பறித்துவிட்டது.

எனவே அமெரிக்காட்டு விமானப் போக்குவரத்து நிர்வாகம், இலாகா மனிதர்களைநம்புவதைவிட நாய்களை நம்பலாம் என்று தீர்மானித்தது. இப்போது தனது 25 விமான நிலையங்களுக்குத் தேவையான நாய்க்காவலர்களை விலைக்கு வாங்க யோசித்து வருகிறது!

# வர்ணங்களால் ஓசையைக் குறைக்க முடியுமா?

லெனின்கிராடு, செப். 28—

வர்ணங்களால் ஓசையைக் குறைக்க முடியும் என்று லெனின்கிராடு நிபுணர்கள் கூறுகின்றனர்.

குளுமையானநீலவர்ணங்களும், பச்சை வர்ணங்களும் ஓசையைத் தடுக்கின்றன எனறும், ஓசையினால் மனிதனுக்கு எரிச்சல் மூளாதவாறு செய்கின்றன என்றும், பரிசோதனைகள் மூலம் அவர்கள் நிரூபித்துள்ளனர். சிவப்பு முதல் மஞ்சள் வரையுள்ள வர்ணங்கள், குறைந்த ஓசைகளைத் தடுக்கின்றன என்றும் அவர்கள் கண்டுபிடித்துள்ளனர். தட்டுமுட்டுச் சாமான்களை உற்பத்தி செய்யும பாக்டரி தொழிலாளர்களின உழைப்பு உற்பத்தித் திறனை அதிகரிக்க அவர்களது கண்டுபிடிப்பு பயன்படுகிறது.

—ஏ. பி. என்.

# அமெரிக்காவில்

வாஷிங்டன், செப். 28—

அமெரிககாவில் புளோரிடாவிலிருந்து வந்த செய்தியின் மூலம மிஸ் எவினா ரிச்சி என்ற மாதுக்குச் சொந்தமான 81 நாய்கள் அந்த மாதின் மரணத்துக்குப் பின்னர் 1.4 கோடி டாலர் பெறுமானமுள்ள சொத்துக்கு வாரிசாகியுள்ளன.

மிஸ் ரிச்சி என்ற இந்த சொந்தக்காரி 45லட்சம் டாலர்மதிப்புள்ள தனது எஸ்டேட்டை 150 நாய்களுக்கு உரிமையாக உயில் எழுதி வைத்து விட்டுச் சென்றிருக்கிறாள். எனினும் இவள் எழுதி வைத்த உயிலை ஆட்சேபித்து இவளது உறவினர்கள் சிலர் வழக்குத்

[4- ஆம் பக்கம் பார்க்க]

# மார்க்சிஸ்ட் கட்சி தலைமையில் மக்கள் இயக்கங்கள் தீவிரம்

## காங்கிரசுக்குள் அடிதடி ஆரம்பம்

(நமது கல்கத்தா நிருபர்)

கல்கத்தா, செப். 29—

இந்தியா முழுவதும் ஆழமாகிவிட்ட பொருளாதார நெருக்கடி, மேற்குவங்கத்தில் விசுவரூபம் எடுத்துவிட்டது.

விலைவாசி உயர்வும், வேலையில்லாத் திண்டாட்டமும், இந்தியாவில் வேறு எந்த மாநிலத்திலும் கண்டிராத அளவு, மேற்கு வங்கத்தில் உச்ச கட்டத்தை அடைந்துவிட்டது.

மேற்கு வங்க காங்கிரஸ் ஆட்சியாளர்கள் மத்தியிலும் ஊழல்கள் மிகுந்து நாற்றம் நடுத்தெருவுக்கு வரத் தொடங்கிவிட்டது.

தேர்தல் நடப்பதற்கு முன்பு இருந்த பாசிஸத்தனமான அடக்குமுறையும் குண்டர்களின் தாக்குதல்களும், மக்களின் ஜனநாயக உரிமைகளைப் பறிப்பதும், தொடர்ந்துநடந்துகொண்டுதான் இருக்கிறது.

### மக்கள் எழுச்சி

இந்த ஊழல்களையும், அடக்குமுறைகளையும், விலைவாசி ஏற்றத்தையும், வேலையில்லாத் திண்டாட்டத்தையும், ஜனநாயக உரிமைப் பறிமுதலையும் எதிர்த்து மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சியும், சி ஐ டி யூ வும் மாபெரும் கிளர்ச்சியைத் தொடங்கவிருக்கின்றன.

4-10-72 முதல் 14-10-72 வரை ஆர்ப்பாட்டங்கள் நடத்தப்போகிருர்கள்.

### இடது கட்சிகள் இணைந்து கிளர்ச்சி

இந்த மாபெரும் ஆர்ப்பாட்டங்களில், மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சியுடன், சோசலிஸ்ட் யூனிட்டி சென்டரும், ஆர். எஸ். பி. யும், புரட்சிக் கம்யூனிஸ்ட் கட்சியும், ஓர்க்கர்ஸ்பார்ட்டியும், மார்க்சிஸ்ட் பார்வர்டு பிளாக்கும் மற்றும் பல இடதுசாரி குழுக்களும் சேர்ந்து கிளர்ச்சி செய்ய முன் வந்துள்ளன.

வலது கம்யூனிஸ்ட் கட்சி இந்தக்கூட்டு இயக்கத்தில் சேராவிட்டாலும், அதே கால கட்டத்தில், தனியாக நின்று இதே கோரிக்கைகளுக்காக கிளர்ச்சி நடத்தப்போவதாகத் தெரிவித்துள்ளது.

### காங்கிரஸ் கட்சி கலங்குகிறது

இவ்வாறு மீண்டும் இடதுசாரிக் கட்சிகள் அனைத்தும் ஒன்று சேர்ந்து கிளர்ச்சி நடத்துவதைக் கண்டு, ஆளுங் காங்கிரஸ் கட்சி அரண்டு போய்க் கிடக்கிறது.

மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சித் தலைமையில் நடக்கும் இந்தக் கிளர்ச்சி பற்றி என்னநினைக்கிறீர்கள்என்று மேற்கு வங்க காங்கிரஸ் கமிட்டி செயலாளர் பிரிய தாஸ்முன்ஷியை பத்திரிகை நிருபர்கள் கேட்டபோது. "அதை அரசியல் அடிப்படையில் எதிர்த்து போராடுவோம்"—என்று பதில் கூறினர்.

அந்த அரசியல் அடிப்படை என்ன என்று மீண்டும் கேட்டபோது. பதில் சொல்ல மறுத்துவிட்டார்.

இதிலிருந்தே, அவர்களின் அரசியல் அடிப்படையின் நோக்கம் தெரிகிறது. அதாவது, "பெரய்பூர் பொதுகூட்டத்தில் ஜோதி பாசுவைவுயும், ஜோதிர்மாய்பாசுவையும் பேசவிடாமல், கலாட்டா செய்தும், காரை மறித்து தாக்குதல் நடத்தியும் அட்டூழியம் செய்தார்களே"—அது போன்ற ரௌடிச் செயல்கள்தான் காங்கிரஸ் கட்சியின் அரசியல் அடிப்படை என்று தெரிகிறது.

### ஆளும் காங்கிரசில் அடிதடி ஆரம்பம்

பொருளாதார நெருக்கடியும்—அதை எதிர்த்து மக்களின் வீறு கொண்ட போராட்டங்களும் எழுகின்றபோது— ஆளும்கட்சிகுள்ளே பதவிப் போட்டிகளும், அடிதடியும் ஏற்படுவது முதலாளித்துவ உலகத்தில் சர்வசாதாரணமாகும்.

அதுபோல், மேற்கு வங்க ஆளும்காங்கிரஸிலும் குத்து வெட்டு ஆரம்பமாகிவிட்டது. மக்களிடையே செல்வாக்குப் பெற காங்கிரஸ் எம். எல். ஏ.க்கள் பலரும் முயன்று வருகிருர்கள். 4 காங்கிரஸ் எம். எல். ஏ.க்கள் விலைவாசி உயர்வையும், வேலையில்லாத் திண்டாட்டத்தையும் எதிர்த்து வீதியிலே வந்து ஆர்ப்பாட்டம் செய்யப்போவதாக அறிவித்துள்ளார்கள்.

முதலமைச்சர் சித்தார்த்த சங்கர்ரே தலையிட்டு, அப்படியெல்லாம் வீதிக்கு வந்து சந்தி சிரிக்கக்கூடாது என்று கூறி எவ்வளவோ தாஜா செய்து பார்த்தார், ஒன்றும் பலிக்கவில்லை. மிரட்டியும் பார்த்தார் பலிக்கவில்லை.

"காங்கிரஸ் ஊழியர்களை மிரட்டிவிட முடியாது"—என்றும், "காகிதப் புலிகளே, எங்கள் ஸ்தாபன பலத்தைப் பாருங்கள்?"—என்று கோஷித்துக் கொண்டு இவர்கள் ஆர்ப்பாட்டம் நடத்தினுர்கள். ஆர்ப்பாட்டக்காரர்கள், மேற்குவங்க சட்டமன்ற காங்கிரஸ் கட்சியின் செயலாளரையும், கொறடாவையும்கூட இழுத்து வந்துவிட்டார்கள். இவர்களெல்லாம் ஐ என் டி யூசிக்கு எதிரானவர்கள்.

இந்த 4 எம் எல் ஏக்கள் மீது நடவடிக்கை எடுக்க சட்ட மன்றக் கட்டிடத்தில் மேற்கு வங்க காங்கிரஸ் கமிட்டித் தலைவரும், செயலாளரும் மற்றும பலரும் கூடினுர்கள்.

### எதிர் முழக்கம்

ஆனல், அந்த 4 எம் எல் ஏக்களும் அந்தக் கட்டிடத்தின் முன்னே ஒரு ஜீப்பில் அமர்ந்து கொண்டு, ஒலி பெருக்கி வைத்து வாய்க்கு வந்தபடி திட்டி விட்டுப் போனுர்கள். அப்புறம், ஊர்வலத்தில் கலந்து கொண்டு, ரே எதிர்ப்பு ஆர்ப்பாட்டம் செய்தார்கள்.

26—9—72-ல் ரே நடத்திய கூட்டத்துக்கு எதிர்ப்புறமாக, 30 கெஜ தூரத்திலல் இவர்களும் போட்டிக்கூட்டம் நடத்தினுர்கள். அடிதடி மட்டும்தான் நடக்கவில்லை. மற்றபடி அத்தனையும் நடத்துவிட்டது.

### ரேயின் திசை திருப்பல்

முதலமைச்சர் ரேயின் கட்சிக்காரர்களே அவரை எதிர்த்தனர்மூர்,க்கஆவேசமாக நிற்பதைக் கண்டரே அவர்களின் ஆவேசத்தைத் திசை திருப்பிவிடவும்—அவர்களது கோபத்திலிருந்து தப்பவும், ஒரு ஜாலக்கு வேலை செய்தார்.

அதாவது, "மார்க்சிஸ்டுகள் அக்டோபர் 4-ம்தேதியன்று கலகம் செய்யத் திட்டமிட்டிருப்பதாகவும்— அதை அரசாங்கம் பார்த்துக் கொண்டிருக்காது என்றும்—ஆனல் அன்று மார்க்சிஸ்டு தலைவர்களைக் கைது செய்யப்போவதில்லையென்றும் — நிலைமையைக் கூர்ந்து கவனித்துக்கொண்டிருப்பதாகவும்" — எதை யெதையோ பேசி கூட்டத்திலிருந்து தப்பித்துக் கொண்டதாக "எகனமிக் டைம்ஸ்" பத்திரிகை கூறுகிறது.

---

# வளரும் நாடுகளின் அறிவாளிகளை கவர்ந்து செல்லும் திருடர்கள்!

புதுடில்லி, செப். 28—

இந்தியாவிலிருந்து அமெரிக்காவுக்குச்சென்ற பேராசிரியர்ஹரிகோவிந்தகொரானுவுக்கு நோபல் பரிசு கிடைத்தபோது, நம்நாட்டுப் பத்திரிகைகள் அவ்வளவு உற்சாகத்துடன் அச்செய்தியை வரவேற்கவில்லை; ஏனெனில் இந்தியராகப் பிறந்த கொரானு, அமெரிக்கப் பிரஜையாகிவிட்டார். ஒரு அமெரிக்கப் பிரஜை என்ற முறையிலேயே அவர் நோபல் பரிசை ஏற்றுக் கொண்டார். எனவே, அமெரிக்க விஞ்ஞானத்தின் பெருமைக்குரிய சின்னமாக அவர் கருதப்படுகிருர்.

கொரானுவின்வாழ்க்கை, இன்றைய நாகரிகத்தின் முக்கிய அம்சங்களில் ஒன்றை எடுத்துக் காட்டுகிறது. அறிவாளிகளும் நிபுணர்களும் வேறு நாடுகளுக்குக் குடிபெயரும் நிகழ்ச்சிகள் தாமாக நடப்பதில்லை. வளர்ச்சியடைந்த ஏகாதிபத்திய நாடுகளின் திட்டமிட்ட நடவடிக்கைகளின் விளைவாகவே இவை நடைபெறுகின்றன. தங்களது பொருளாதார, அரசியல் ஆதிக்கத்தை நிலைநாட்ட வேண்டும் என்ற நோக்குடன், வளர்ச்சி யடைந்த நாடுகள் கையாளும் பழைய தந்திரத்தின் புதிய வடிவம் இது.

19ம் நூற்றுண்டு காலனியாதிக்கவாதிகள், தமது ஆட்சிக்குட்பட்ட நாடுகளிலிருந்து கப்பல் கப்பலாக வாசனைத் திரவியங்களையும் ரப்பரையும் கொள்ளையடித்துச் சென்ருர்கள். இன்று பயிற்சி பெற்ற, திறமையான அயல்நாட்டு நிபுணர்களைக் கவர்ந்து செல்கிருர்கள்.

1960ஆம் ஆண்டுகளின் பிற்பகுதியிலிருந்து "மூன்ருவது உலக" நாடுகளில் சுதந்திரம் பெற்ற வளரும் நாடுகளில் — "மூளை" வேட்டைக்காரர்கள் தமது வலையை வீசி வருகின்றனர். 1967-ஆம் ஆண்டில் அமெரிக்காவில் குடியேறிய மொத்த அறிவாளிகள் மற்றும் நிபுணர்களில் 52 சதவிகிதத்தினர் வளரும் நாடுகளைச் சார்ந்தவர்கள் ஆவர்; அடுத்த மூன்று ஆண்டுகளில் இது 72 சதவிகிதமாக உயர்ந்துவிட்டது.

### இந்தியாவிலிருந்து

ஆசிய நாடுகளைஎடுத்துக் கொண்டால் இந்தியாவிலிருந்துதான் அதிக அறிவாளிகளும் நிபுணர்களும் கவர்ந்து செல்லப்பட்டுள்ளனர்; 1970-ல் 2900 விஞ்ஞானிகளையும், எஞ்சினியர்களையும், டாக்டர்களையும் இந்தியா இழந்துள்ளது. லத்தீன் அமெரிக்காக் கண்டத்தை எடுத்துக்கொண்டால், மெக்ஸிகோவிலிருந்துதான் ஏராளமான அறிவாளிகளும் நிபுணர்களும் கவர்ந்து செல்லப்பட்டுள்ளனர்: சென்ற பத்தாண்டுகளில் 62,000க்கு மேற்பட்ட நிபுணர்கள் மெக்ஸிகோ நாட்டிலிருந்து குடிபெயர்ந்துள்ளனர்.

வளரும் நாடுகளிலிருந்து அறிவாளிகளும் நிபுணர்களும் எவ்வாறு கவர்ந்து செல்லப்படுகின்றனர்? முதலாவதாக, அமெரிக்கா போன்ற வளர்ச்சியடைந்த நாடுகளுக்கும், இந்தியா போன்ற வளரும் நாடுகளுக்கும் இடையேயுள்ள "விஞ்ஞான, தொழில் நுட்ப இடைவெளி" பயன்படுத்திக் கொள்ளப்படுகிறது.

### அமெரிக்கத் "திருடர்கள்"

அமெரிக்கச் செய்தி ஏஜென்ஸி போன்ற மேலைய தகவல் நிறுவனங்கள், ஏகபோகங்களின் கட்டளைக் கேற்ப, "மூன்ருவது உலக" நாடுகளிலிருந்து வரும் அறிவாளிகளுக்கும் நிபுணர்களுக்கும் மிக அதிக ஊதியங்களும், சிறந்த உழைப்புச் சூழ்நிலைகளும் வழங்கப்படும் என்று, "மூன்ருவது உலக" நாடுகளில் ஒரு பிரசாரஇயக்கத்தைநடத்துகின்றன. இதன் விளைவாக ஒரு "விஷச் சக்கரம்" உருவாக்கப்படுகிறது. "விஞ்ஞான—தொழில் நுட்ப இடைவெளி"யின் பயனுகை. நிபுணர்கள் பெருமளவில் அயல் நாடுகளில் குடியேறும் பொழுது, அந்த இடைவெளி மேலும் அதிகரிக்கிறது.

ஏகாதிபத்திய நாடுகள் "மூளை வேட்டை"யின் போது விசேட முறைகளைக் கையாண்டு மிகுந்த பலனை அடைகின்றன. வளரும் நாடுகளின் பல்கலைக் கழகங்களையும், ஆராய்ச்சி நிலையங்களையும், அயல் நாட்டு "ரெக்ரூட்டிங் ஏஜென்டுகள்" துழாவுகின்றனர். பல்வேறு கருத்தரங்கங்களுக்காக அயல் நாடுகளுக்கு விஜயம் செய்யும் விஞ்ஞானிகளை இவர்கள் சந்தித்து, "நீங்கள் தாயகம் திரும்பவேண்டாம், இங்கேயே தங்கி விடுங்கள்" என்று வலியுறுத்திக் கூறுகின்றனர். கடைசியாக, "மூன்ருவது" நாடுகளின் மாணவர்கள் பயிலும் மேலை நாடுகளின் கல்லூரியிலேயே நேரிடையாகவே வலைகள் விரிக்கப்படுகின்றன. இதன் விளைவாக, அமெரிக்காவில் கல்வி பயிலும் 80 சதவிகித மாணவர்கள், தமது படிப்பு முடியுமுன்னரே தாயகங்களுக்கு வெளியேயுள்ள வேலைகளுடன் "பிணைக்கப்" பட்டு விடுகின்றனர்.

இதனுல் இறுதியில் எவருக்குப் பொருளாதார ரீதியில் இழப்பு ஏற்படுகிறது என்பதைக் கூற வேண்டியதில்லை. ஒரு நிபுணரைப் பயிற்றுவிப்பதற்கு 20,000 டாலர் முதல் 50,000 டாலர் வரை செலவாகிறது. அமெரிக்காவுக்கு மட்டும் குடி பெயரும் அறிவாளிகள் மற்றும் நிபுணர்களால், அவர்களது தாயகங்களுக்கு ஆண்டுதோறும் 15 கோடி டாலர் மதிப்புள்ள முதலீடுகள் இழப்பு ஏற்படுகிறது.

இது மட்டுமன்று, ஒரு அறிவாளிஅல்லதுநிபுணன் தனது ஆயுட்காலத்தில் சரமாரியாக 5 இலட்சம் டாலர் மதிப்புள்ள பொருளாயத, ஆன்மீக மதிப்புக்களை உற்பத்தி செய்கிருன் என்று கணக்கிடப்பட்டுள்ளது எனவேதான் 19-வது பக்வாஷ் மாநாட்டின் உறுப்பினர்கள், "ஜனத்தொகைப் பெருக்கம்" ஆகியவற்றைப் போல், அறிவாளிகள் மற்றும் நிபுணர்கள் அயல்நாடுகளுக்குக் கவர்ந்து செல்லப்படும் பிரச்னையும் கடுமையானதே" என்று கூறியுள்ளனர்.

— நமது சிறப்பு நிருபர்

---

# மணிக்கு 1500மைல் செல்லும் சோவியத் விமானம்

லண்டன், செப். 27—

மணிக்கு 1500 மைல் தூரம் செல்லக்கூடிய அதிவேக புதுரக "மிக்" விமானங்களை சோவியத் நாடு தயார் செய்துள்ளது. அமெரிக்காநாடு தயாரிக்கும் பெரும் நவீன விமானம்கூட இந்த மிக் விமானத்தை எட்டிப்பிடிக்காது. இந்த விமானத்தின் இறக்கைகள் பின்னேக்கி வளைந்திருக்கும்

"உலகின் விமானங்கள்" என்னும் புத்தகத்தில் இந்தச் சோவியத் விமானம்பற்றிய தகவல்கள் வெளியிடப் பட்டுள்ளன.

---

# ஹௌரா மாஜிஸ்டிரேட் முன் ஆர்ப்பாட்டம்

ஹௌரா, செப். 26—

மார்ட்டின் லைட் ரயில்வே தொழிற்சாலையை திறக்கக் கோரியும், அத்தியாவசியப் பொருட்களின் விலையைக் கட்டுப்படுத்தக் கோரியும், இளைஞர்களுக்கு வேலை கோரியும் ஹௌராமாவட்ட மாஜிஸ்டிரேட் அலுவலகம் முன் 5 மணி நேர ஆர்ப்பாட்டம் நடைபெற்றது. இடதுசாரி ஐக்கிய முன்னணியைச் சேர்ந்த 200 பேர் ஆர்ப்பாட்டத்தில் கலந்து கொண்டனர். மாவட்ட நீதிபதியிடம் மகஜர் ஒன்றும் கொடுக்கப் பட்டது.

---

# டெலிவிஷன் திரையுடன் கூடிய 'கண்ணுடிகள்'

மாஸ்கோ, செப். 28—

கண்பார்வை அற்றவர்களுக்கும், மிக மோசமான கண் பார்வை உடையவர்களுக்கும் உதவி செய்வதற்காக சோவியத் நிபுணர்கள் கருவிகளை உருவாக்கி வருகின்றனர். 25 சென்டி மீட்டர் தூரத்திற்கு அப்பால் ஒன்றையும் பார்க்க முடியாதவர்களுக்காக, அவர்கள் இரண்டு கருவிகளைத் தயாரித்துள்ளனர். அவற்றுள் ஒன்ருன 'லச்' என்ற கருவி, படிப்பதற்காக தயாரிக்கப்பட்டது. இந்தக் கருவியினுள் புத்தகம் வைக்கப்படுகிறது. அதிலுள்ள சிறிய திரையில் புத்தகத்தின் வாசகங்கள் 8 மடங்கு பெரிதாகத் தெரிகின்றன.

மற்ருெரு கருவி. கையில் எடுத்துச் செல்லக் கூடிய டெலிவிஷன் அமைப்பாகும். அதில் ஒரு டெலிவிஷன் செட்டும், ரிசப்ஷன் மற்றும் டிரான்ஸ்மிஷன் ஏற்பாடும் உள்ளது. அதை ஒரு வஸ்துவுக்கு நேரே அமைத்தால், டெலிவிஷன் திரையில் மிகத் தெளிவாகவும் பல மடங்கு பெரியதாகவும் பிம்பம் தோன்றுகிறது.

இவ்விரண்டு கருவிகளையும் மிக எளிதில் இயக்கலாம். இவற்றின் விலையும் மலிவானது.

— ஏ. பி. என்.

---

மோசடி செய்த நண்பருக்கு

# நீதிபதியின் சலுகை

நியூயார்க், செப். 28—

நியூயார்க் நகரைச் சேர்ந்த ராபர்ட் ஹென்னிங் என்ற வழக்கறிஞர் இரண்டரை லட்சம் டாலர் மதிப்புள்ள சொத்தை மோசடி செய்துவிட்ட குற்றத்துக்காக அண்மையில் தண்டிக்கப்பட்டார்.

எனினும் அவரை விசாரித்த நீதிபதி தொழில்துறையில் தமக்குச் சகாவான அந்த வழக்கறிஞருக்குத் தண்டனை விதிப்பதில் ஒரு பிரத்தியேகச் சலுகை காட்டினுர்.

அதாவது அடுத்த ஆறு வருட காலத்துக்கு அவர் வாரந்தோறும் கடைசி விடுமுறை தினத்தை மட்டும் சிறையில் கழித்தால் போதும் என்று தண்டனை விதித்தார். இவ்வாறு தண்டனை விதிப்பதின் மூலம் "அவரது பிழைப்புக்கும் ஆபத்து வராது; அவர் தமது குடும்பத்துக்குத் தேவையான பணத்தைச் சம்பாதித்துக் கொள்ளலாம்" என்றும் அந்த நீதிபதி விளக்கம் கூறினுர்.

அமெரிக்க நாட்டுச் சட்டப்படி இத்தகைய மோசடிக் குற்றத்துக்குக் கூடிய பட்சம் நூறு ஆண்டுகட்குமேல் தண்டனை விதிக்கலாம் என்பதும் இங்கு நினைவுகூறத்தக்கது.

---




# புனர்ஜென்மம்

'புனர்ஜென்மம்'; புது வாழ்வு!

யாருக்கு ?

ஒரு 'அப்பாவி' கல்லூரி ஆசிரியருக்கும் அவர் காதலித்துத் திருமணம் செய்து கொண்ட மனைவிக்கும்.

காதலிக்கிருன். வெகு அன்புடன் நேசிக்கிருன்: மிகமிக நெருக்கமானஉறவு கொள்கிருன்.......

ஆனல்.....

கடைசியில் அவளுடன் தாம்பத்திய உறவு கொள்ளும் நேரத்தில் — அவளை விட்டுஓடுகிருன் !

அவன் என்ன பைத்தியமா?

இல்லை.

பில்லி சூன்யமா? இல்லை. மந்திரத்தால் இதைத் தீர்க்கும் முயற்சி உண்டா?

அப்படிப்பட்ட முயற்சி முட்டாள்தனம் என்பதையும் படத் தயாரிப்பாளர்கள் வெகு திறமையாக எடுத்துக் காட்டுகின்றனர்.

அப்படியானுல் உண்மை என்ன?

அவன் ஒரு ஆண் மகனுக்குரித்தான வீர்யமில்லாதவனு? அப்படியும் இல்லை.

தன் காதல் மனைவியை படுக்கையறையில் கண் கலங்கிடச் செய்து விட்டு, பயித்தியம் பிடித்தவன் போல் ஓடும் அவன்......... சமையலறைக்குள் படுத்து தூங்கும் வேலைக்காரியுடன் தன் காமவெறியைத் தீர்த்துக்கொள்கிருன் !

தன் மானமுள்ள ஒரு மனைவி இச் செயலை ஏற்பாளா?

ஏற்கவில்லை.

அவன் கல்லானுலும் கணவன், புல்லானும் புருசன் என்று நினைத்திடும் பத்தாம் பசலி அல்ல- அவள் நவீன காலத்திய மங்கை!

வேலைக்காரியையும் வெளியேற்றி விடடு, தானும் கணவன் வீட்டை விடடு வெளியேறுகிருள்-

அதன் பிறகு...

அவள் கோவிலுக்குப் போய் தன் கணவனைத் திருத்த அர்ச்சனை செய்யவில்லை. அல்லது இன்ஞெரு கணவனைத் தேடி ஓடவுமில்லை. விதியை நொந்து கொண்டு வீட்டிலிருந்து புலம்பவுமில்லை.

அவளும் அவளுடைய தகப்பனரும் ஒரு டாகடரை-டாக்ரா? — ஆம் மனேதத்துவ டாக்டரை-அணுகுகிருர்கள். தன் மகளின் கதையைச் சொல்கிருர் தகப்பன்.

கேட்டுக் கொள்கிருர் டாக்டர்.

பின்னர் அந்த அப்பாவி கல்லூரி ஆசிரியரை அழைத்துக் கேட்கிருர். (மெஸ்மரிஸத்தின் மூலம்—இதுஅவசியமற்ற புகுத்தல்) அவனுடைய இளமைகால வாழ்க்கையைத் தெரிந்து கொள்கிருர். அதில் அவருக்கு ஒரு "ரகசியம்" கிடைக்கிறது

ஆம்! "ரகசியந்தான்"!

அதை அவளிடத்தில் கூறுகிருர் டாக்டர்; அத்துடன் சில ஆலோசனைகளையும் கூறுகிருர். "அவன் உன் கணவன்; அவனிடத்தில் நீ மறைக்க வேண்டியது எதுவுமே இல்லை" என்று டாக்டர் அவளிடம் கூறும் உபதேசம் திரைப்படத்திலும் அதன் பிறகு மறைக்கப்படவில்லை! ("செக்ஸ்" அம்சங்கள் உண்டு. ஆனல் அதை நாசுக்காக—"செக்சி" என்று சொல்ல முடியாமல் எடுத்திருக்கிருர்கள். என்ருலும் படத் தயாரிப்பாளர்களின் "செக்சி" வேகத்தை மூடிமறைக்க முடியவில்லை. இறுதியில் தயாரிப்பாளர்கள் அந்த இருவரின் பிரச்சினை தீர்க்கப்பட்டவுடன், "பூமொட்டுவிரிந்தது"என்ற பொருத்த மற்ற உதாரணத்தையும் "கடல் மடை திறந்தது" என்ற அபத்தமான உதாரணத்தையும் "டெம்போவுக்காக" காட்டமுயலுவது அசிங்கமான உதாரணம்)

சரி!

அந்த "ரகசியம்" என்ன? பிரச்சினை எவ்வாறு தீர்ந்தது?

வேறு ஒன்றுமல்ல. சிறுபிள்ளையிலிருந்தே தந்தையை இழந்த அவன் அம்மாவின் செல்லப்பிள்ளையாய் வளர்ந்தான். பெரிய 'ஆண்பிள்ளை'யாகஆனபிறகும்செல்லப்பிள்ளையை அரவணைத்துத் தாலாட்டிதினம் தூங்கவைப்பாள் அன்னை!

இறந்துபோன இந்தத் தாயின் முகத்தை தன் மனைவியின் முகம் ஒத்திருந்தது. நெருக்கமாக மனைவியுடன் உறவு கொள்ளப் போகும்போது தாயின் நினைவு வந்து ஓடுகிருன் இது தான் அந்த ரகசியம்.

இதைத் தெரிந்து கொண்ட அந்தப் பெண் டாக்டரின் ஆலோசனைப்படி ஒரு நாள் அவன் தாயைப் போலவே வேடந்தரித்து திடீரென அவன் முன் காட்சியளிக்கிருள்— அவன் மூர்ச்சையாகிருன். தன் தவறை அவனும் உணருகிருன்— அவளும் தன் "தவறை" (கணவனிடம் மறைப்பதற்கு எதுவுமில்லை என்பதை) உணருகிருள். பிரச்னை தீர்க்கப்படுகிறது.

இதுதான் கதை.

வெகு திறமையாகப் படம் பிடித்துள்ளார்கள். "செக்சி" என்று இதைக் கண்டனம செய்வது சரியல்ல. சில அம்சங்களைத் தவிர்த்திருக்கலாம்.

தாம்பத்திய உறவுகள் முறிவதற்கு பல காரணங்கள் உண்டு.

அவைகளில் இதுவும் ஒன்று எனப் படத்தயாரிப்பாளர்கள் வெகு திறமையாக எடுத்துக் காட்டுகிருர்கள்.

மூடநம்பிக்கைகள் பிரச்னைக்குத் தீர்வு அல்ல என்று வலியுறுத்திக் காட்டுகிருர்கள். பகுத்தறிவிற்கு இடம் தந்து விஞ்ஞான வழியில் இப்படிப்பட்ட சிக்கல்களைத் தீர்க்க வழிகாட்டும் சிறந்ததொரு முயற்சி. இப்படம் என்று கூறினுல் தவறல்ல.

தமிழ்ப் படங்களின் டப்பாங்குத்து-கத்திச்சண்டை-குத்து வெட்டு-மாடமாளிகைகள்-திடீர் பணக்காரனுவது திடீர்பணக்காரியாவது காமவெறியூட்டும் காட்சிகள்போன்றமுதலாளித்துவ கலாச்சரர வியாபாரங்களுக்கு மாறுபட்ட வகையில இந்த மலையாளப்படம் இருப்பது வரவேற்கத்தக்கது.

இனிமையான பாடல்களும் — பாத்திரங்களுடன் ஒன்றிய நடிப்பும் — நல்ல படப்பிடிப்பும்கதைக்கு விறுவிறுப்பூட்டுகின்றன.

-- விமர்சகன்.

---



---

# பஞ்சாலை தொழிற்சங்கங்களின் கவனத்திற்கு

தோழர்களே,

பஞ்சாலைத் தொழிலாளர்களின் சென்ற பொது வேலை நிறுத்தத்தின்போது தொழிற் சங்கப் பிரதிநிதிகளுடன் செய்து கொள்ளப்பட்ட 9-3-72-ம் தேதிய ஒப்பந்தம் பல மில்களில் சரிவர அமுல் நடத்தப்படவில்லை. இதைப்பற்றியும், குறைந்த பட்ச சம்பள விகிதங்களை உருவாக்கி கன்சிலியேஷன் போர்டு முன்பு சமர்ப்பிப்பது பற்றியும் பரிசீலிக்க, பஞ்சாலைத் தொழிலாளர் சங்கப் பிரதிநிதிகளின் மாநில ரீதியான கூட்டத்தை அக்டோபர் 7, 8 தேதிகளில் மதுரையில் கூட்டுவதென்று மாநிலக் குழுவின் திருவெட்டார் கூட்டம் முடிவு செய்துள்ளது. குறைந்த பட்சம் சங்கத்துக்கு ஒரு பிரதிநிதியாவது வரவும், பல்மில்கிளைகளைக்கொண்டசங்கங்கள் அவசியமான எண்ணிக்கையில் பிரதிநிதிகளை அனுப்பி வைக்கவும், ஒவ்வொரு மில்லிலும் ஒப்பந்தம் எவ்விதம் அமுல் நடத்தப்படுகிறது என்ற முழு விபரங்களையும் சேகரித்து வருமாறு பிரதிநிதிகளைக் கேட்டுக் கொள்கிறேம்.

தோழமையுள்ள

ஆ. நல்லசிவன்,
உதவிச் செயலாளர்
சி. ஐ. டி. யூ. தமிழ் மாநிலக்குழு

மதுரை
24—9—72

# கண்ணோட்டம்

## போராடாவிட்டால் விலைவாசி இறங்குமா?

போராட்டம் நடத்தினுல் விலைவாசி இறங்கி விடுமா?...

இப்படி ஒரு கேள்வியை எங்கு போனுலும் கேட்கிருர் இந்திரா காந்தி.

அதே கேள்வியை வேறுவிதமாக நாம் கேட்கிரேும்.

அம்மா தாயே! ஆளவந்த பெரியம்மையே! போராட்டம் நடத்தாமல் பொறுமையோடு காத்திருந்தால் விலைவாசி இறங்கி விடுமா? ...

இந்தக் கேள்விக்கு இந்திரா காந்தியால் பதில் சொல்ல முடியாது. ஏனென்ருல் 25 ஆண்டுகளாக காங்கிரஸ் கட்சிக்கே ஓட்டுப் போட்டு, ஓட்டுப் போட்டு... விலைவாசியை இறக்கும் வேலையில்லாத் திண்டாட்டத்தைப் போக்கும் என்று எதிர்பார்த்து... எதிர்பார்த்து...போராட்டம் நடத்தாமல் பொறுமையோடுதான் நாட்டு மக்கள் இருந்தார்கள்.

அப்படிப் பொறுமையாக இருந்ததினுலே......... அம்மையாரே! உங்களைத்தான் கேட்கிரேும்:

### விலைவாசிகள் ஒரு நயாபைசாவாவது இறங்கியதா? இறக்கினீர்களா?

அம்மையாரே! உங்களைத்தான் 2-வது தடவையாக கேட்கிரேும்:

### விலைவாசிகள் ஒரு நயாபைசாவாவது இறங்கியதா? இறக்கினீர்களா?

அம்மையாரே! உங்களைத்தான் 3-வது தடவையாக கேட்கிரேும.

### விலைவாசிகள் ஒரு நயா பைசாவாவது இறங்கியதா? இறக்கினீர்களா?

இப்படி மூணு தடவை கேட்கிரேுமே.........இதற்கு நீங்கள் ஒரு தடவையாவது வாய் திறந்து, "ஆம்! அரிசியிலேயும் கோதுமையிலேயும ஐநது பைசாவைக் குறைத்திருககிறேன். உபபிலேயும பபபிலேயும ஒன்பதுபைசாவை குறைததுவிட்டேன். துணிவிலையை மீட்டருககு இத்தனை பைசா...எண்ணெய்விலையை லிட்டருக்கு இததனை பைசா குறைத்தேனே... என்னையாபார்த்து இந்தப் பெரிய கேள்வியைப போட்டு விட்டாய்?" — எனறு அதட்டிக் கேட்க வேண்டாமா?... அபபடிக் கேட்கவில்லையே... ஏன்?... சட்டியிலே இருநதால தானே அகபபையிலே வரும்!...

சரி, போய்த் தொலையட்டும். விலைவாசிகளை ஒரு பைசா கூட இறக்கத்தான் முடியவில்லை... விலைவாசி ஏருமலாவது கட்டுப்படுததி வைததீர்களா? — என்று நாம கேட்டால், ஏதடா, இன்னெரு பெரிய கேள்வியையும் போடுகிருப் போலிருக்கிறது. இதற்கு என்ன பதில் சொலலுவது என்று அம்மையார் தலையைச் சொரிந்து கொண்டு நிறக... அப்போது அருகிலுள்ள அவரது பொருளாதார நிபுணுதி நிபுணர், "அந்தக் கேள்விக்கும நம்மிடத்திலே பதில இருக்குது. அதாவது நமது நாட்டில் மட்டும் புதுசா ஒன்றும விலைவாசி ஏறிவிடவில்லை உலக நாடுகள் முழுவதிலுமே விலைவாசி ஏறித்தான் இருக்குது எனறு பதில் சொல்லி விடுங்கோ"— என்று ஆலோசனை கூறி விடுகிருர்.

உடனே அம்மையாரும் துள்ளியெழுந்து "நம்ம நாட்டில் மட்டுமா? எல்லா பின் தங்கிய நாடுகளிலும் விலைவாசிகள் ஏறியிருக்கின்றன...முன்னேறிய நாடுகளில் கூடத்தான் விலைவாசி ஏறி இருககிறது! இந்தியாவில் மட்டுமா புதுசா!',... என்று ஒரு போடு, பொதுககூட்டத்திலே போடடு விடுகிருர்.

ஒரு வேளை நமக்கு உலக நாடுகளின் விலைவாசிப் புள்ளி விபரம தெரியாமல் இருக்குமென்று நினைத்துதான் இந்த அளப்பு அளந்தாரோஎனனவோ தெரியாது. இதற்கு பார்லிமெண்டிலுள்ள நமது கட்சி எம். பி. தோழா ஜோதிர்மாய்பாசு சரியான பதிலடி கொடுத்தார். எனன சொன்னுா தெரியுங்களா?

கடந்த 10—8—72 நாடாளுமன்ற கூட்டத்திலே பேசுகையில:

"இதோ, மதிப்புவாய்ந்த "ட்ரிபியூன்" பத்திரிகையில் வந்திருககிறது. அதிலே— 1971 ஜுலை மாதத்திய சர்வ தேச லேபர் ஆபீஸ தயாரிதத பொதுவான விலைவாசிப் பட்டியலை வெளியிட்டிருக்கிறது. அந்த விபரப்படி: கென்யாவிலே 18.5 புளளி... இலஙகையிலே 29.5 புள்ளி...... தாய்லாந்திலே 19 புள்ளி......ஈரானிலே 17 புள்ளி......... மெக்சிகோவிலே 28.5 புள்ளி...... பாகிஸ்தானிலே 45 புள்ளி......இவையெல்லாம் பின்தங்கிய நாடுகளின் விலைவாசி ஏற்றப புள்ளி விபரம்.

இனி முன்னேறிய நாடுகளில் விலைவாசி எவ்வளவு ஏறியிருககிறது எனறு பார்ப்போம. அமெரிக்காவிலே விலைவாசி ஏறறம் 33 புள்ளி... கனடாவிலே 30 புள்ளிக்கு சிறிது கூட...ஆஸ்திரேலியாவிலே 32.5 புள்ளி... ஜப்பானிலேதான் அதிகம விலை ஏறியிருககிறது. அதாவது 53 புள்ளி...

இப்படி பின்தங்கிய நாடுகளிலும் சரி, முன்னேறிய நாடுகளிலும் சரி, விலைவாசிகள் ஏறியிருந்தாலும், ஏறக்குறைய 50 புளளி அளவைத்தான் முட்டிககொணடு நிறகிறது. அதற்குமேலே எவவ முடியவில்லை.

ஆனுல இந்தியாவில் எவ்வளவு ஏறியிருக்கிறது?...

### 90 புள்ளி ஏறியிருக்கிறது

"இதற்கு என்ன ஜவாப் சொல்லப்போகிறீர்கள்?" என்று ஜோதிர்மாய் பாசு கேட்டார்.

உடனே, இந்திரா காந்தி, தனது பொருளாதார நிபுணரிடம் போய குசு குசு என்று பேசிவிட்டு வந்து, "விலைவாசி ஏறறம ஒன்றும நிரந்தரமான அம்சம் அலல பருவததுக்குப் பருவம ஏறும இறங்கும். அறுவடை வநதால சரியாகிபபோகும்"— என்று ஒரு மொழுகு மொழுகினுர்.

அதற்கும் ஜோதிர்மாய்பாசு சரியான பதில் கொடுத்தா. என்ன சொன்னுர் தெரியுங்களா?

"ஆளவந்த அம்மையே! ஆட்சி பீடத் தலைவியே! இது பருவததுககுப பருவம ஏறியிறங்கும் நிலைமை அல்ல. உஙகளுடைய பொருளாதார ஆலோசகரும விவசாயப் பணடஙகளின விலைவாசி கமிஷன் தலைவருமான டாக்டர் அசோக மித்ரா எழுதிய கட்டுரை ஒன்றிலே:

"கடந்த 3 ஆண்டுகளாக உணவு தானியங்களின் விலைவாசி தொடர்சசியாக ஏறுமுகமாக இருக்குபபோது... ரேஷன் மூலமாகவும், நியாய விலைக்கடைகள் மூலமாகவும் உணவு வினியோகம் செய்வது தொடர்ச்சியாக குறைந்து கொண்டே வந்திருக்கிறது. இதுவும் விலைவாசி ஏறறதுக்கு ஒரு முக்கியமான காரணமாகும்" — என்று எழுதப் பட்டிருககிறது.

அதற்கான புள்ளிவிபரத்தையும் டாண் டாண்ணு அதிலே குறிப்பிடப் பட்டிருக்கிறது. அதாவது:

1969-ம ஆண்டிலே 96 லட்சம் டன் நியாய விலைக் கடைகள் மூலமாக வினியோகிககப்பட்டது.

அது 1970-ம் ஆண்டிலே 89 லட்சமாகக் குறைந்து விட்டது. அதாவது 7 லட்சம் டன் குறைந்துவிட்டது.

அப்புறம் 1971-ம் ஆண்டிலோ 77லட்சமாக இறங்கி விட்டது. அதாவது, முந்திய ஆண்டைவிட 12 லட்சம டன தானியத்தை குறைத்து வினியோகித்திருக்கிருர்கள்"—எனற கட்டுரையைம படித்துக் காட்டினுர் ஜோதிர் மாய்பாசு.

விலைவாசிகள் ஏறுவதைக் கண்டவுடனேயே, தீவிர கொள்முதல் செய்வதிலும் — நியாய விலைக் கடைகளை முன்னைவிட அதிக எண்ணிக்கையில் திறப்பதிலும் — கவனம் செலுத்தி இருந்தால், விலைவாசி ஏற்றத்தைக் கட்டுப் படுத்த முடிநதிருககும அல்லவா! அதற்கு மாருக, ஆண்டு தோறும நியாய விலைக் கடைகள் மூலம வினியோகிக்கும் தானிய அளவையும் அல்லவா சுருக்கிக் கொணடே வந்திருக்கிருர்கள்!

வினியோகக் குறைப்பினுல் யாருக்கு லாபம் தெரியுமா? பதுக்கிவைத்து கொள்ளை லாபம அடிக்கும் பகற் கொள்ளைக் கூட்டததுக்குத்தான் லாபம். காங்கிரஸ் ஆட்சியால அவர்களதான லாபம. அடைகிருர்கள்.

இப்படி விலைவாசியைக் கிளறினுல், வேறு பல வாசிகளும் வருகின்றன.

அவைகளைப் பற்றி பிறகு பார்ப்போம்.

ஐ. மா. பா.

---

# சர்க்கரை ஆலைகளை தேசியவுடமை ஆக்க அரசு தயங்குவதேன்?

சர்க்கரை ஆலைகளைத் தேசியவுடைமையாக்க வேண்டும் என்று சிபாரிசு செய்துள்ள அரசாங்கம் நியமித்துள்ள சர்க்கரை விசாரணைக்கமிட்டி கூட்டுறவு துறையிலுள்ள சர்க்கரை ஆலைகளுக்கு பாராட்டுக் கூறியுள்ளது. "அரசுத் துறை சர்க்கரை ஆலைகளுடன் போட்டிபோடும் முறையில் கூட்டுறவு சர்க்கரை ஆலைகளுக்கு ஊக்கம் அளிக்க வேண்டும்" என்று அந்தக்கமிட்டி தன்னுடைய இடைக்கால அறிக்கையில் கூறியுள்ளது.

இது ஆபத்தானயோசனையாகும், தட்சிணபீடபூமி பகுதியில் தான் கூட்டுறவு சர்க்கரை ஆலைகள் அதிகமாக இருக்கின்றன.

மிகவும் பிந்திய காலத்தில் ஏற்படுத்தப்பட்ட இந்த ஆலைகள் மற்ற ஆலைகளை விட நவீனமானவை. கரும்பு சப்ளை கிடைக்கும் இடத்துக்கு அருகாமையிலும் இவை அமைந்துள்ளன.

### பழைய காலத்தவை

வட இந்தியாவிலுள்ள சர்க்கரை ஆலைகள் பெரும்பாலும் தனியார் உடைமையிலுள்ளவை. பழைய கால யந்திரங்களைக்கொண்டவை இப்போது செய்யப்படுவது போன்று மக்கள் விரோத நடவடிக்கைகள் மூலம் சர்க்கரை விலையைஉயர்த்தி வைத்திருந்தாலன்றி இந்த ஆலைகள் நட்டத்தில்தான் ஓடும்.

கூட்டுறவு ஆலைகளை விட்டு விட்டு தனியார் உடைமையிலுள்ள ஆலைகளைமட்டும்தேசியவுடைமையாக்கினுல், அது லாபம் தரும் ஆலைகளைவிட்டுவிட்டு, நன்ருக ஓட முடியாத ஆலைகளை மட்டுமே எடுத்துக் கொள்ளுவதாகும். இங்கு கூட்டுறவு ஆலைகள் என்பது பெயரில் மட்டுமே கூட்டுறவு ஆலைகளாக இருக்கின்றன என்பதையும் இவை முதலாளிகளாலே கட்டுப்படுத்தப் படுகின்றன. என்பதையும் இங்கு குறிப்பிட்டாக வேண்டும்.

அரசாங்க உதவிகளைப் பெறுவதற்காக கூட்டுறவு ஆலைகள் என்ற போர்வையைத் தறித்துக கொண்டிருந்தாலும் இவை தனியார் முதலீட்டு நிறுவனங்களே யாகும்.

இந்தியாவில் கூட்டுறவு நிறுவனங்களின் பொது நியதியே இவ்வாருகத்தான் இருக்கிறது.

### கூட்டுறவுஅமைப்பை உடைக்க உடைமை வர்க்கச் சதிகள்

முந்தைய நாடாளுமன்ற பொதுக்கணக்குக் கமிட்டி (1969—70-ல்) சமர்ப்பித்த அறிக்கையில் கீழ்வருமாறு குறிப்பிடப்பட்டுள்ளது.

"நாட்டில் கூட்டுறவு அமைப்புகள் செயல்படுவதைக் குலைக்க உடைமை வர்க்கங்கள் முனைந்து கொண்டிருப்பது கண்டு கமிட்டி கவலையுறுகிறது. இவர்கள் பதவிகளில் நிரந்தரமாக இருக்க ஏற்பாடு செய்துகொண்டு கூட்டுறவு சொசைட்டிகளின் பணிகளில் தங்களுக்கும், நண்பர்களுக்கும் உறவினர்களுக்கும் பெரும்பகுதியை சுருட்டிக் கொண்டுள்ளனர்."

இந்நிலையில் கூட்டுறவு சர்க்கரை ஆலைகளைத் தேசியவுடைமையாக்காமல் விடுவது லாபகரமாக ஓடும் ஆலைகளைத் தொடாமல் விடுவதாகும்.

பழைய மில்களை அரசு எடுத்துக் கொள்ளுவதென்பது, உ. பி. யில் கண்டது போல் பெரும் கடன் சுமையை ஏற்றுக்கொள்ளுவதாகும்.

### தேர்தல் சாகசம்

1971-ம் வருட நாடாளுமன்ற இடைத் தேர்தலுக்கு முன்பாக ஓர் அவசரச் சட்டத்தின் மூலம் மாநில அரசு நன்ருக ஓடாத 12 சர்க்கரை ஆலைகளை எடுத்துக்கொண்டது.

தேர்தலுக்கு முன்பாக காங்கிரஸ் கட்சிக்குச் சாதகமான அபிப்பிராயத்தை உண்டாக்கவேண்டும் என்பதற்காக இவ்வாறு செய்யப்பட்டது. ஆலைகளின் கடன்கள் நட்டஈட்டுத் தொகையிலிருந்து சரிக்கட்டப்படும் என்று அவசரச் சட்டம் கூறியது. ஆனுல் நட்டஈடு ரூ. 3·26 கோடியே கொடுக்க வேண்டி இருந்தது. கடனே ரூ. 14·50 கோடிக்கு மேல் இருந்தது. இககடனில் விற்பனை வரி, கரும்பு பயிரிடுவோருக்குப் பாக்கிகள் ரூ5·89 கோடி. தொழிலாளர்களுக்குக் கொடுக்கவேண்டிய சம்பளப் பாக்கி, ரிப்பேர் செலவு முதலியனவும் அடங்கியிருந்தன. பேனு அசைப்பில் சர்க்கரை ஆலை முதலாளிகளுக்குச் சகாயம் செய்ய முடிந்தது. கரும்பு பயிரிடுவோர், தொழிலாளர்கள் பாக்கியையும் தீர்க்க முடிந்தது. ஆனுல் இதற்கு பொது மக்கள் வரிப்பணத்திலிருந்து ரூ. 11 கோடி கொட்டிக் கொடுக்க வேண்டிருந்தது.

இவ்வாறு நன்ருக ஓடாத ஆலைகளை எடுத்துக் கொண்டு லாபகரமாக ஓடும் ஆலைகளை விட்டு விடுவது, தேசியமயமாக்கும் நடவடிக்கையையே கேலிக் கூத்தடிப்பதாகும். அனைத்து சர்க்கரை ஆலைகளையும் எடுத்துக் கொள்ளுவதால் நல்ல ஆலைகளிலிருந்து கிடைக்கும் லாபம நன்கு ஓடாத ஆலைகளின் நஷ்டத்தை விட அதிகமிருக்கும் மேலும் சர்க்கரைத் தொழிலில் தேவையான அபிவிருத்திகளையும், விஸ்தரிப்பையும் செய்ய முடியும். சர்க்கரை முதலாளிகளின் நிர்ப்பந்தத்தை உதறி விட்டு சர்க்கரைத் தொழில் முழுவதையும் தேசிய மயமாக்கும் நடவடிக்கையை அரசு மேற்கொள்ள முடியுமா?

--ரஞ்சன்சௌத்ரி

---

# மதுரை அரசினர் தொழிற்பயிற்சி மாணவர்கள் வேலை நிறுத்தம்

## நிலைய முதல்வர் மிரட்டல்

மதுரை, செப். 29— மதுரை புதூரில் உள்ள அரசினர் தொழில் பயிற்சி நிலையத்தில் (ஐ. டி. ஐ.) பயிற்சி பெற்று வரும் சுமார் 1000க்கு மேற்பட்ட மாணவர்கள் கடந்த 26—9—72 முதல் வேலைநிறுத்தம செய்து வருகிருர்கள்.

அன்று காலை 11 மணிக்கு தொழில் பயிற்சி நிலையத்திலிருந்து அனைவரும் கோரிக்கைகளை முழங்கிக் கொண்டு ஊர்வலமாக மாவட்ட கலெக்டர் அலுவலகத்திற்குச் சென்று, கலெக்டரின் தனி உதவியாளரை கண்டு பேசினர்.

### முன்பும் இப்படித்தான் ஏமாற்றிவிட்டீர்கள்

மாணவர்களின் கோரிக்கைகளை கேட்ட கலெக்டரின் தனி உதவியாளர், இன்னும் 10 நாட்களில் கவனித்து கோரிக்கைகளை நிறைவேற்றுவதாகவும், மாணவர்கள் வேலைக்குச் செல்லவேண்டுமென்றும் கூறினுர்.

அதற்கு மாணவர்கள், "இப்படித்தான் 3 ஆண்டுகளுக்கு முன்னே ஸ்ட்ரைக் நடத்தியபோது, கலெக்டர் வாக்குறுதி அளித்தார். அவர் சொற்படி வேலைக்குச் சென்ரேும. ஆனுல் ஒன்றுமே நடக்கவில்லை; ஏமாற்றி விட்டார்கள்"—என்று கூறிவிட்டு, ஆவேசமாக மாணவர்கள் திரும்பி வந்துவிட்டார்கள். வேலைநிறுத்தம தொடர்ந்து நடைபெறுகிறது.

### பெற்ரேர்களுக்கு மிரட்டல் கடிதம்

இதற்கிடையில், ஐ டி ஐ முதல்வர், அச்சடித்தகார்டுகளை மாணவர்களின் பெற்ரேர்களுக்கு அனுப்பியுள்ளார்.

அதில், 30—9—72 க்குள் உங்கள் மகனை பயிற்சி நிலையத்துக்கு அனுப்பத் தவறினுல், பதிவேட்டிலிருந்து பெயர் அடிக்கப்படுமென்றும் பயிற்சிக்குசெலவாகிய தொகை வசூலிக்கப் படும் எனறும் — உதவித் தொகையும் விடுதி வசதியும் ரத்து செய்யப்படுமென்றும் — ஏற்கெனவே கொடுத்த தொகையும் வசூலிக்கப் படுமென்றும்" மிரட்டியுள்ளார்.

### மாணவர் கோரிக்கை

பயிற்சி மாணவர்கள் கோருவது என்ன?

1. எல்லா பயிற்சியாளர்களுக்கும் உதவிப் பணம் வழங்க வேண்டும்.

2- பயிற்சி நிலையத்தை உற்பத்தி ஸ்தலமாக மாற்ற வேண்டும்.

3. பயிற்சி முடிந்தவுடன் கால தாமதமின்றி குறிப்பிட்ட காலத்தில் அப்ரெண்டிஸ் வழங்க வேண்டும்.

4- வேலைக்குஉத்தரவாதம் வேண்டும்.

5 அப்ரண்டிஸ் அல்லாத காலங்களில் மாதம் ரூ 45 உதவித் தொகை தர வேண்டும்,

6 தேசிய கவுன்சில் சிபாரிசுப்படி, போதகர்களுக்கு ஊதிய உயர்வு அளிக்க வேண்டும்.

7 பயிற்சி பெற்ற எல்லாருக்கும் டிப்ளமோ வழங்க வேண்டும்

8 தேசியக் கவுன்சில் சிபாரிசுப்படி போதகர்களுக்கு உதவி முதல்வர் பதவி வழங்க வேண்டும்,

9 பயிற்சியாளர்களால் தேர்ந்தெடுக்கப்பட்ட "பயிற்சியாளர் தலைவர்" ஒருவர் நியமிக்கப்படவேண்டும்.

ஆகிய இந்த9கோரிக்கைகளைவலியுறுத்தி காலவரையின்றி வேலைநிறுத்தம் செய்து வருகிருர்கள். திருச்சியிலும் ஐ. டி. ஐ. மாணவர்கள் வேலைநிறுத்தம் செய்து வருகிருர்கள்,

---

# வெள்ளத்தில் 40பேர் பலி

## சில மாவட்டத்தில் கன மழை

கோவை, செப். 30— நேற்று முன்தினம் பெய்த அடை மழையின் விளைவாக நொய்யல், ஜாம்பனை ஆகிய நதிகள் பெருக்கெடுத்தன. இந்தத் திடீர் வெள்ளத்தின் விளைவாக திருப்பூரில் 40 பேர் இறந்தனர். 1000 பேருக்கு மேல் வீடிழந்தனர்.

### புயல் மழை

மதுரை செப் 30— சென்ற நான்கு நாட்களாக தொடர்ந்து மழை பெய்து வருகிறது. வைகை ஆறும் பெருக்கெடுத்துள்ளது.

தஞ்சை மாவட்டமெங்கும், கிழக்கு ராமனுதபுரம் பகுதிகளிலும், திருச்சி மாவட்டத்திலும் கனமழை பெய்தது.மேட்டூர் அணைநீர் மட்டம் 62 அடி. பரவலாக மழை பெய்திருப்பதால் பாசனத்திற்கு தண்ணீர் விடுவது நிறுத்தப்பட்டதுஎன அதிகாரிகள் அறிவிக்கின்றனர்,

தொடர்ந்து அதிக மழை பெய்யுமென்று வானிலை அறிவிப்புகள் கூறுகின்றன.

---

# கப்பலில் இறந்த எம். பி.

புதுடில்லி செப் 29— அந்தமானுக்குச் சென்று கொண்டிருந்த ராமானந்த சாஸ்திரி எம். பி. கப்பலில் நேற்று காலமானுர்.

---

# அமெரிக்காவில்....

(2ம் பக்கத் தொடர்ச்சி)

தொடர்ந்தனர்.

வழககு நடந்த காலத்தில் இந்தச் சொத்தின் மதிப்பு 1.8 கோடி டாலராக உயர்ந்துவிட்டது. அத்துடன் சில நாய்களும் இறந்துவிட்டன. இறுதியாக, நீதிமன்றத்தில் செய்துகொண்ட ஏற்பாட்டின்படி மிஸ் ரிச்சியின் சொத்தில், ரிச்சியின் ஒன்றுவிட்ட சகோதரிகள் இருவருக்கும், ஒன்றுவிட்ட சகோதரர்கள் இருவருக்கும் 5 சதவிகிதம் தான் கிட்டியது. மீதிச் சொத்து முழுவதும் நாய்களுககே போய்ச சேர்ந்தன.

இந்த முடிவுக்குப் பின் அவர்கள் கூறியது இது தானே: "நாமும் நாயாகப பிறநதோமில்லையே!"

---

# புள்ளி விவரங்களில் மத்திய...

(1ம் பக்கத் தொடர்ச்சி)

டன் மிச்சமிருக்க வேண்டும்.

அப்படியிருக்கும் போது, இவ்வாண்டு ஆகஸ்ட் மாத இறுதியில் இருந்ததாகச் சொல்லப்பட்ட 100 லட்சம் டன்னையும் சேர்த்து, கையிருப்பு 128 லட்சமாக இருக்க வேண்டும் அல்லவா?

ஆனுல், இவ்வாண்டு 100 லட்சம் டன் கொள்முதல் செய்ய மாதம் 9 லட்சம் டன வினியோகம் செய்த பிறகு அடுத்த ஏப்ரல் இறுதியில், தற்சமயம் உள்ள கையிருப்பை விட சற்று குறைவாகவே கையிருப்பு தானியம் அரசினிடம் இருக்கும் என்று இந்தக் கமிஷன் அறிக்கை கூறுகிறதே! அப்படியானுல் அரசினிடம் கையிருப்பு தானியம் அனேகமாக இல்லை என்ருகிறதே!

### ஆட்சியாளர் கவலை

எந்தப புள்ளி சரியோ அது ஆண்டவனுக்குத் தான வெளிச்சம்.

இந்த சந்தர்ப்பத்தில், மத்திய அரசின் தொழில் அமைச்சர், அடுத்த ஆண்டில் நியாயவிலைக் கடைகளின் மூலம் மக்களின் பலவீனப் பகுதியினருக்கு (ஏழைகளுக்கு) உணவு தானியங்கள், துணி, பருப்பு முதலிய அத்தியாவசியப் பண்டங்கள் விநியோகிப்பதற்கு ஏற்பாடு செய்யப்படும் என்று இம்மாதம் 26-ம் தேதி புனுவில் ஒரு கூட்டத்தில் அறிவித்துள்ளார்.

அதுவரையில் விலைகள் இன்னும் ஏறட்டும. அதற்கும் பிறகு விமோசனம் கிடைக்கும் என்று மக்கள் கைகட்டிக் கொண்டிருப்பார்களா என்று ஆளும் வட்டாரங்களில் கவலையாக இருக்கிறது.

---

# மங்களூரில்.....

[1-ம் பக்கத் தொடர்ச்சி]

செங்கொடிமயமான காட்சியும், மின்சாரவிளக்குகளின் அலங்காரமும் பரவச மூட்டின.

கூட்டத்திற்கு, கன்னட மாநில சி. ஐ. டி. யூ. தலைவர் தோழர் சூரியநாராயண ராவ் தலைமைவகித்தார்.

தோழர்கள் ஏ. கே. கோபாலன், ஆர்.உமாநாத் பேசினர்.

மாநாட்டில், தென் மாநில பீடி தொழிலாளர் கமிட்டி தேர்ந்தெடுக்கப்பட்டது. கானடகா தோழர் எஸ. சூரியநாராயணராவ்தலைவர் ஆந்திர தோழர் பிரசாத ராவ். உப தலைவர், கேரளா தோழர் சி. கண்ணன் பொதுச்செயலாளர், தமிழ்நாடு தோழர் வே. கண்ணன் உதவி செயலாளர் மற்றும் தோழர் ஆர். உமாநாத உள்பட 17 உறுப்பினர்கள் அதாவது கேரளா 6, கர்னுடகா 5. தமிழ்நாடு 4. ஆந்திரா 2. தேர்ந்தெடுக்கப்பட்டனர்.

தியாகிகளுக்கு வணக்கம் செலுத்தப்பட்டது. பாதகர்களால் படுகொலை செய்யப்பட்ட தோழர் அழிக்கோடன்ராகவனுக்கு அஞ்சலி செலுத்தி முதலில தீர்மானம் நிறைவேற்றிபிரதிநிதிகள்எழுந்து நின்று மரியாதை செலுத்தினர்.

---

# கட்சியைப் பிடிக்க காங்கிரசில் கோஷ்டி சண்டை

(1-ம் பக்கத் தொடர்ச்சி)

பத்தாயிரம் பேர் சேர்க்கப் பட்டுள்ளனர். சோஷலிஸ்ட் நடவடிக்கைக்கான காங்கிரஸ் அரங்குக்கும் முன்னுள் பிரஜா சோஷலிஸ்ட் தலைவர்களுக்கும் இடையே போட்டாபோட்டி ஏற்பட்டுள்ளது.

மகாராஷ்டிரத்தில்,போலி உறுப்பினர் சேர்க்கையைப் பற்றிய நிலைமை அ. இ. கா. க. மேற்பார்வையாளர் ஏ என் சாவ்லா விசாரணைக்குப் பிறகுதான் தெரியும்,

### கோஷ்டி சண்டை

எனினும் கட்சி ஸ்தாபனத்தைப் பிடிக்க அமைச்சரவைக் கோஷ்டியும் அதிருப்தியாளர் கோஷ்டியும் கோதாவில் இறங்கியிருப்பதும் பகிரங்க ரகசியம்.

மகாராஷ்டிரத்தில் நாகபுரி, ஷோலாப்பூர், அவுரங்காபாத் முதலிய மாவட்டங்களில் போலி உறுப்பினர் சேர்க்கை பற்றி புகார்கள் வந்துள்ளன. அ. இ. கா. க. மேறபார்வையாளர் ஆர் கே சின்கா இதுபற்றி விசாரித்து வருகிருர்.

### தமிழகத்தில் பூசல்

இதுபோல் தமிழ் நாட்டிலும் போலி உறுப்பினர் சேர்க்கை பற்றி அதிருப்தி கோஷ்டியினர் புகார்கள் கூறியுள்ளனர். உறுப்பினர் சேர்க்கையை செப். 9-ம் தேதி முதல் அ. இ. கா. க. மேற்பார்வையாளர் என், என். கைலாஸ் நிறுத்தி விட்ட போதிலும் கட்சியை நிர்வகிப்பவர்கள் போலி உறுப்பினர்களை சேர்த்திருப்பதாக அதிருப்தியாளர் கோஷ்டி குற்றம சாட்டியுள்ளது.

குறிப்பாகதங்களுக்குஆதரவு இல்லாத இடங்களில் புதிய உறுப்பினர்கள் சேர்க்கப்பட்டிருப்பதாக அதிருப்தியாளர்கள் கூறியுள்ளனர். காங்கிரஸ் தலைவர் சங்கர் தயாள்சர்மாவுக்கும் இது பற்றி அவர்கள் புகார் அனுப்பியுள்ளனர். தேர்தலுக்கு முன்பிருந்ததை விட கட்சி உறுப்பினர் எண்ணிக்கை ஆறுமடங்குஅதிகமாகியுள்ளது,

---

இந்திய கம்யூனிஸ்ட்கட்சி (மார்க்சிஸ்ட்) தமிழ்மாநிலக் குழு சார்பில், தீக்கதிர் அச்சகத்தில் (13, முதல் சந்து வடக்குச் சித்திரை வீதி, மதுரை.1) அச்சிட்டு வெளியிடுபவர் ஆசிரியர் கே. முத்தையா.

---

# "தீக்கதிர்" சந்தாதார்கள் கவனத்துக்கு!

தோழாகளே!

கட்சியின் தமிழ் மாநிலக் குழு முடிவின்படி வருகிற அகடோபர் 1-ந் தேதி முதல் தீக்கதிரின் விலை 15 காசாக உயர்வதால், சந்தா செலுத்தி பத்திரிகை பெறும் தோழர்கள் கீழக்காணும் விகிதப்படி சந்தாத் தொகையை அனுப்பிவைக்க வேண்டுகிரேும்.

| | | |
|---|---|---|
| 1 மாதச் சந்தா | ... | ரூ. 4—00 |
| 3 ,, | ... | ரூ. 11—00 |
| 6 ,, | ... | ரூ. 22—00 |
| 1 ஆண்டு சந்தா | ... | ரூ. 44—00 |

நிர்வாகி,
தீக்கதிர்.